# Cuddles always say "I love you."

Show your little ones how much you love them! And is there a better way of doing that than giving them a huggable, cuddlable playmate?

Cuddles. From the people who have given children the delightful entertainer of a magazine, Chandamama. Cuddles. A whole new range of stuffed toys. And, your old favourites. And, cute surprises being introduced regularly. Each one a sweet, adorable companion to your child. Absolutely safe. Designed to withstand childhandling.

Well, the fun and excitement of the festive season is just round the corner. Make it memorable for your child with a special gesture. With a Cuddle.

- CUDDLES — Stuffed toys from Chandamama.
- SAMMO — Mechanical and electronic toys from Chandamama

## CUDDLES

Manufactured in technical collaboration with Sammo Corporation South Korea

**CHANDAMAMA TOYTRONIX**

Chandamama Toytronix Private Limited, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026

*from*

**THE HOUSE OF**

**CHANDAMAMA**

Madras M CTPL 4274

**CUDDLES AND SAMMO TOYS WILL BE AVAILABLE AT ALL LEADING TOY OUTLETS EXCEPT IN THE STATES OF ASSAM, HIMACHAL PRADESH, MADHYA PRADESH AND NORTH EASTERN STATES**

# மங்கை

டிசம்பர் '91

☆ கார்த்திகை தீபங்கள்

☆ குறுநாவல், கவிதை

☆ 'காலத்தாற் செய்த உதவி'
(பேட்டிக் கட்டுரை)

☆ ஆகாய ஊஞ்சல்
(சர்க்கஸ் நிர்வாகி சந்திப்பு)

☆ கிறிஸ்துமஸ்-சிறப்புகள்

மற்றும் வழக்கமான சிறப்புப் பகுதிகள்

விலை ரூ. 6/-

TA—F-1



# அம்புலிமாமா

டிசம்பர் 1991



## பொருளடக்கம்





தனிப்பிரதி ரூ. 4-00.

வருட சந்தா ரூ. 48-00.

CASIO

# தாளம் அமையட்டும் இசை முழங்கட்டும்!

கேஸியோ கீபோர்டு கொண்டு இசை அமைப்பது மிகவும் எளிதானது. ஏனெனில் அவற்றிலுள்ள சிறப்பம்சங்கள் உங்களை ஒரு இசை மேதையைப் போல் இயக்க வைத்திடும். கருவியைக் கூட்டி, தாளம் அமைத்து உங்களுக்குப் பிடித்தமான பாட்டுடன் இயக்குங்கள். கேஸியோ இருப்பதால் உங்கள் இசை முழக்கம் ஒரு தனிக் கவர்ச்சி பெறும்.

© 1991 CASIO

SOUND KIDS










**CITY MUSIC CO., PTE LTD.**
Singapore Tel: 3377058, 3377545

**ONFLO MUSIC CO., LTD.**
Hong Kong Tel: 722 4195

**RAINBOW PHOTO FINISHERS PTE LTD.**
Nepal, Kathmandu Tel: 221724

**GENERAL ENTERPRISES COMPANY**
U.A.E., Dubai Tel: 224131/2/3

**MAHMOOD SALEH ABBAR CO.**
Saudi Arabia, Jeddah Tel: (02)6473995

**ARABIAN CAR MARKETING CO.,LTD.**
Oman Tel: 793741

**CASIO COMPUTER CO., LTD.**
Tokyo, Japan.

M-9111 RAPCI TM

# Ekco®

# மார்க்கர்

## "24" கொண்ட பேக்கிலே

இது புதியது! இது நேர்த்தியானது! தெளிவான துடிப்பான வண்ணங்களில்!

இலட்சக்கணக்கான மார்க்கர் செட்டுகள் யு.எஸ்.ஏ. வுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

"12" கொண்ட பேக்கிலும் கிடைக்கிறது.




இந்தியாவின் மிகப்பெரிய உற்பத்தியாளர்கள் மற்றும் ஏற்றுமதியாளர்கள்.

[illegible] 18 சுபாஷ் ரோட், வில் பார்லே (கி), பம்பாய்-400 057.





# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி


## மன்னித்தல்

அண்மையில் புதுடில்லியில் நடந்த ஒரு கூட்டத்தில் நட்புறவும் மன்னிப்பதும் பற்றிப் பெரிதும் வலியுறுத்தப்பட்டது. எவ்வளவு உயரிய நோக்கு! இவை இரண்டும் உலக சமாதானத்திற்கும் சகோதரத்திற்கும் அடிகோலுபவையாகும்.

உலகில் மனிதன் வாழத்தான் வேண்டும். ஆனால் யாரும் தனித்து இருக்க முடியாது. மனிதன் சமுதாயத்தில் மற்றவர்கள் பெறும் பங்கைத் தானும் பெற்றே தானும் வாழ்கிறான். இது நட்பிற்கு வழி வகுக்கிறது. மனிதனுக்கு அவனது நண்பன் தீங்கு செய்யமாட்டான். எப்போதாவது ஒருவன் தன் நண்பனின் மனதைப் புண்படுத்தினாலோ அல்லது இக்கட்டான நிலையில் கொண்டு போகிறானோ அப்போது அவன் மன்னிப்புக் கோருகிறான். மன்னிக்கவும் படுகிறான். தவறுவது மனித இயல்பு. அதனை மன்னிப்பது தெய்வீகத் தன்மை என்பது பழம் வழக்கு.

மன்னிப்பவன் சகிப்புத் தன்மையைக் கொண்டுள்ளவன். 'நீ கெடுதலை எதிர்க்காதே. உன்னை ஒருவன் வலது கன்னத்தில் அறைந்தால் நீ உன் இடது கன்னத்தையும் அவன் மறுபடியும் அறையக் காட்டு' என பைபிள் கூறுகிறது. மன்னிப்பதை விட வேறு உயரிய செயல் உண்டா?

புது டில்லிக் கூட்டத்தில் சொற்பொழிவு ஆற்றிய நம் பிரதமர் அஹிம்சையும் மன்னிப்பதும் நம்மிடையே வளர வேண்டும். அவற்றிற்கு ஊக்கம் அளிக்க வேண்டும் என்று எடுத்துரைத்தார். நண்பர்களிடையே இவை வளர்வதுபோல உலக நாடுகளிடையேயும் இவை வளர வேண்டும். அப்போது தான் கிருஸ்மஸின் பெருமை அதாவது உலகில் சமாதானமும் நல்லெண்ணமும் மனிதர்களிடையே நிலவும்.


மதிமுகம்: 89 டிசம்பர் 1991 புன்னகை: 6

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00




# இளமை துள்ளும் வண்ணங்கள்





பள்ளிக்குச் சென்றால் ஆனந்தம்
புதிய ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ் போஸ்ட்டர்
கலர்கள் இருந்தால் ஆனந்தம்
பேரானந்தம்!
வண்ணமோ வண்ணம்
அழகான வண்ணம்
பச்சைக் கிளிபோல்
பளிச்சிடும் வண்ணம்
கண்ணைப்பறிக்கும் சிகப்பு, நீலம்
பால்போல்
வெண்மை, பனிபோல் மென்மை
இன்னும் என்ன யோசனை?!!
படங்களை உடனே கையில் எடுப்பீர்
புதிய ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ் போஸ்ட்டர் கலர்களை
தீட்டுவீர்! பரவசம் அடைவீர்!

(அம்மாவைக் கண்டு மிரளாதீர் கைவண்ணம் பார்ப்பார்,
விலையைக் கேட்டார் அசந்தே போவார்!)



இலவசம்
பெயின்ட்-எ-போஸ்ட்டர்
இம்முகவரிக்கு எழுதிப் பெறவும் :
ஃபெவிக்ரில், போஸ்ட் பாக்ஸ் 17437,
அந்தேரி (கிழக்கு), பம்பாய்-400 069.

புதிய
**ஃபெவிக்ரில்**
ஸ்டூடன்ட்ஸ்
போஸ்ட்டர் கலர்கள்

everest/91/PIL/117 tm






பெயர் ____________ வயது ____________

முகவரி ____________

____________

பள்ளிக்கூடம் ____________

CDM

## செய்திகளும் தகவல்களும்

# மீண்டும் சுதந்திரம் பெற்ற பால்டிக் நாடுகள்

இந்த ஆண்டு செப்டம்பர் 17ந் தேதி நடைபெற்ற ஐக்கிய நாடுகள் சபையின் 46வது கூட்டம் ஏழு புதிய நாடுகளைத் தன் புதிய உறுப்பினர்களாக ஏற்றது. அவற்றில் சோவியத் யூனியனிலிருந்து வெளிவந்த எஸ்டோனியா, லாட்வியா, லிடோனியா ஆகிய மூன்று நாடுகள் முக்கியமானவை. மற்ற நாடுகள் வட கொரியா, தென் கொரியா, பசிபிக் கடல் நாடுகளான மைக்ரோனேஷியா, மார்ஷல் தீவுகளாகும்.

சோவியத் யூனியனிலிருந்து விடுபட்ட சில தினங்களிலேயே மூன்று பால்டிக் நாடுகளும் ஐ. நா உறுப்பினர்களாக விருப்பம் தெரிவித்தன. 1917 ரஷ்யப் புரட்சிக்குப் பின் இந்த மூன்று நாடுகளும் ரஷ்ய மன்னன் ஜாரின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டுச் சுதந்திர நாடுகளாகின. ஆனால் இரண்டாவது உலகப் போரின் போது 1939ல் ரஷ்ய அதிபர் ஸ்டாலினுக்கும் ஜெர்மானிய சர்வாதிகாரி ஹிட்லருக்கும் இடையே ஏற்பட்ட ஒப்பந்தப்படி இந்த மூன்று நாடுகளும் சோவியத் யூனியனில் சேர்க்கப்பட்டன. இம்மூன்று நாடுகளும் 1940லிருந்து ஐம்பது ஆண்டுகள் வரை சோவியத் யூனியனின் ஆட்சியின் கீழ் இருந்தன. இந்த ஆண்டில் அவை சுதந்திர நாடுகளாகின.




முதலில் லிடோனியா 1990 மார்ச் மாதம் சுதந்திரப் பிரகடனம் செய்தது. சோவியத் யூனியனில் ஆகஸ்ட் மாதம் நடந்த புரட்சியின் போது பிரசிடெண்ட் கோர்பச்சேவ் சுமார் 70 மணி நேரம் பதவியில் இருக்கவில்லை. அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு மற்ற இரு பால்டிக் நாடுகளான எஸ்டோனியாவும் லாட்வியாவும் தாமும் சுதந்திர நாடுகள் எனப் பிரகடனம் செய்தன. கோர்ப்பசேவ் மீண்டும் பதவிக்கு



வந்ததும் இம்மூன்று நாடுகளையும் சுதந்திர நாடுகளாக அங்கீகரித்தார்.

சோவியத் பார்லிமெண்ட் செப்டம்பர் 6ந்தேதி கூடி பால்டிக் நாடுகளின் சுதந்திரத்தை ஏற்றது. இதன் பின் பால்டிக் நாடுகள் ஐ. நா சபையின் உறுப்பினர்களாகக் கோரின. முதலில் ஐ. நா பாதுகாப்பு சபையும் பின்னர் ஐ. நா பொதுச் சபையும் அவற்றின் கோரிக்கைகளை ஏற்றன. இம்மூன்று நாடுகளும் 1917 லிருந்து 1940 வரை லீக் ஆல் நேஷன்ஸ் உறுப்பினர்களாக இருந்தன. ஐ. நாவின் அங்கீகாரம் கிடைத்ததும் லாட்வியா அதிபர் "உலகின் மானவ வர்க்கம் இரண்டாம் உலகப் போரில் இழந்த தம் குடும்பத்தவரை மீண்டும் அடைந்து விட்டது" என மகிழ்ச்சி ததும்பி கூறினார்.

ஐ. நா. பொதுச் செயலர் பெரோஸ் டி குய்யர் கொடியேற்று விழாவில் பேசிய போது ஐ. நா வின் இத்தீர்மானம் உறுப்பினர்களைச் சேர்ப்பதில் புதிய வரலாற்றைப். படைத்தது எனக் கூறினார்.

ஐ. நா. கூட்டத்தில் கலந்து கொண்ட மூன்று பால்டிக் நாடுகளின் அதிபர்களும் தாம் சோவியத் யூனியனுடன் பொருளாதார அரசியல் தொடர்புகளைத் தொடர்ந்து வைத்திருக்கப் போவதாயும் சோவியத் துருப்புகள் தம் நாடுகளிலிருந்து வெளியேறி விடவேண்டும் என்றும் கூறினார்கள். சோவியத் யூனியனுடன் நட்புறவு கொண்டு நல்ல அண்டை நாடுகளாக இருக்கப் போவதாயும் அவை உறுதி கூறியுள்ளன.




# இது வியாபாரம்!

மணலூரில் மாரிசாமி என்பவன் மளிகைக் கடை வைத்து வியாபாரம் செய்து வந்தான். அவன் மிகவும் நேர்மையானவன். அதனால் உள்ளதைச் சொல்லி சாமான்களை விற்று வந்ததால் அவனுக்கு நிறைய லாபம் கிடைக்கவில்லை. கிடைக்கும் லாபமோ குடும்பத்தை நடத்தக் கூடப்போதுமானதாக இருக்கவில்லை. அவன் தன் கடையில் வேலையாள் யாரையும் அமர்த்திக் கொள்ள முடியாமல் தன் மகன் தங்கப்பனையே உதவிக்கு வைத்துக் கொண்டான்.

தங்கப்பன் தன் தந்தையிடம் "என்னப்பா இது! வியாபாரம் சரியாக நடப்பது இல்லையே. நம் குடும்பச் செலவுக்குக் கூடப் பணம் கிடைப்பது இல்லையே" என்ற போதெல்லாம் மாரிசாமி "இது என் ஜாதகக் கோளாறு. எதுவும் கைகூடி வரவிடாமல் துஷ்ட கிரகங்கள் செய்து விடுகின்றன. அதனால்தான் வியாபாரம் நன்றாக நடக்கவில்லை போலிருக்கிறது" என்று கூறிவந்தான்.

ஒரு நாள் மாரிசாமியின் மைத்துனன் தன் ஊரிலிருந்து அவனைக் காண வந்தான். பேச்சு வாக்கில் மாரிசாமி அவனிடம் தன் வியாபாரம் பற்றிக் கூறினான். அவனது மைத்துனன் மாதவனும் "அத்தான்! உங்கள் போக்கில் வியாபாரம் நடந்தால் இலாபம் நிறையக் கிடைக்காது. என்னோடு தங்கப்பனை அனுப்புங்கள். எங்கள் ஊர் பசுபதியின் கடையில் சேர்ந்து அவன் பயிற்சி பெற்று வியாபாரச் சுளுவு நெளிவுகளை அறிந்து கொள்ளட்டும்" என்றான்.

தங்கப்பனும் "மாமா சொல்வது சரி. நான் அவரது ஊருக்குப்

—சிவனார் செல்வன்—



போய் அவர் கூறும் கடையில் வேலை செய்துவிட்டு வருகிறேன்" என்றான். எனவே மாரிசாமி தன் மகனை மாதவனுடன் அனுப்பி வைத்தான். மாதவனும் தன் ஊரை அடைந்ததும் தங்கப்பனைப் பசுபதியிடம் அழைத்துச் சென்று "பசுபதி! இவன் என் மருமகன். இவனது ஊரில் இவன் தகப்பனார் ஒரு மளிகைக் கடையை நடத்தி வருகிறார். இவனுக்கு வியாபாரத்தின் நெளிவு சுளுவுகள் எல்லாம் தெரிய வேண்டும் என்பதற்காக உன்னிடம் பயிற்சி பெறட்டும்" என்றான். பசுபதியும் தங்கப்பனுக்குப் பயிற்சி அளிப்பதாகக் கூறி தன் கடையில் வேலை செய்யுமாறு கூறினான்.

ஒரு நாள் பசுபதியின் கடைக்கு கந்தசாமி என்பவன் வந்து உயர் தர உளுத்தம் பருப்பு வேண்டும் என்று கேட்டான். தங்கப்பனும் ஒரு மூட்டையிலிருந்து கொஞ்சம் உளுத்தம் பருப்பைக் கொண்டு வந்து காட்டினான். கந்தசாமி அதை விட நல்ல பருப்பைக் கொண்டு வந்து காட்டும் படிச் சொல்லவே தங்கப்பன் "இதுதான் இந்தக் கடையில் உள்ள உயர்தரப் பருப்பு. வேண்டுமானால் வாங்கிக் கொண்டு போங்கள்" என்றான்.

அப்போது பசுபதி "தங்கப்பா! அந்த மூலையில் நேற்றிரவு வந்த புதிய மூட்டை இருக்கிறது. அதைப் பிரித்து அந்தப் பருப்பை எடுத்து வந்து அய்யாவிடம் காட்டு" என்றான்.

தங்கப்பனும் அந்தப் பருப்பைக் கொண்டு வரவே கந்தசாமி அதைப் பார்த்து விட்டு "பேஷ். இதில் இரண்டு கிலோ கொடு" என்று கூறி வாங்கிக் கொண்டு போனான். அவன் போனதும் தங்கப்பன் பசுபதியிடம் "ஐயா! இரண்டு மூட்டைகளிலும் ஒரே ரகப் பருப்புதானே இருந்தது!?" எனவே பசுபதியும் "சில வாடிக்கையாளர்களுக்கு எப்போதும் கடைக்காரன் முதலில் காட்டும் பொருள் உயர்ந்ததாக இராது என்று ஒரு எண்ணம் உள்ளது. அதனால் அதே பொருளை வேறு விதமாகக் கூறிக் காட்டினால்

திருப்தி அடைந்து வாங்கிச் சென்று விடுவார்கள். கந்தசாமி இந்த ரகத்தைச் சேர்ந்தவன்'' என்றான் சிரித்துக் கொண்டே.

வேறொரு முறை கணபதி என்பவன் கடைக்கு சாமான் வாங்க வந்த போது கடையில் ஒரே கூட்டமாக இருந்தது. கணபதியோதான் எழுதி வந்த பட்டியலைத் தங்கப்பனிடம் நீட்டித் தனக்கு முதலில் மளிகைச் சாமான்களைக் கொடுக்கும் படிக் கூறினான். தங்கப்பனோ ''உங்களுக்கு முன்னால் வந்தவர்களை கவனித்து விட்டுத்தான் வருவேன்'' என்றான்.

அது கேட்டு கணபதி 'விர்' ரென்று கடையை விட்டுக் கிளம்பவே பசுபதி அவனைக் கூப்பிட்டு ''அந்தப் பட்டியலை இப்படிக் கொடு. உனக்கு முதலில் சாமான்களைக் கட்டிக் கொடுக்கச் சொல்கிறேன். இப்படி இந்த நாற்காலியில் உட்கார்'' என்று ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டான். பட்டியலை தங்கப்பனிடம் கொடுத்து விட்டு கணபதியின் குடும்ப நலன் பற்றி விசாரித்தான். இப்படியே நேரம் போனது கணபதிக்குத் தெரியவில்லை. தங்கப்பனும் எல்லோர் சாமான்களைக் கொடுத்த பிறகே கணபதிக்கு வேண்டியவற்றைக் கட்டிக் கொடுத்தான். கணபதியும் திருப்தியுடன் சென்றான்.



தங்கப்பன் பசுபதியிடம் ''இவர் போக்கு விசித்திரமாக இருக்கிறதே'' எனவே பசுபதியும் ''ஒரு சிலர் தாம் மற்றவர்களைவிட அதிகச் சலுகை பெற வேண்டும் என விரும்புவார்கள். அவர்களுக்கு நாம் சலுகைக் கொடுப்பது போல நடிக்க வேண்டுமேயொழிய உண்மையில் சலுகை அளித்து விடக்கூடாது'' என்றான்.

சில மாதங்கள் கழிந்தன. அப்போது பசுபதி தங்கப்பனிடம் ''இவ்வளவு காலம் உனக்கு வியாபாரத்தின் நெளிவு சுளுவுகளையெல்லாம் அறியச் செய்தேன். இனி கடன் பாக்கியை எப்படி வசூலிப்பது என்று தெரிந்து கொள். நம் கடைக்கு வேலப்பன்



என்பவன் கடன் பாக்கி உள்ளது. அவனிடமிருந்து பணம் வசூலித்து வா பார்க்கலாம்'' என்றார்.

தங்கப்பனும் இரண்டு மூன்று முறை வேலப்பனைக் கண்டு பாக்கியைக் கொடுக்கும்படி கேட்டான். ஆனால் அவன் சாக்குப் போக்கு காட்டிக் கொண்டே இருந்தான். ஒரு நாள் அவன் வந்து மேலும் சில சாமான்களைக் கடனுக்குக் கேட்டான். அப்போது தங்கப்பன் ''நீ கொடுக்க வேண்டியது நிறைய இருக்கிறது. அதைத் தீர்த்தாலே உனக்குப் புதிதாகக் கடன் கொடுக்க முடியும்'' என்றான்.

அப்போது பசுபதி ''வேலப்பா! உனக்கு வேண்டியதை வாங்கிப் போ. உன் சௌகரியம் போலப் பணம் கொடு. அவசரமில்லை. உன் பணம் எங்கே போய்விடப் போகிறது? நீ ஊரை விட்டா ஓடி விடப் போகிறாய்? உன் மூத்த மகளுக்கு இன்னும் ஒரு மாதத்தில் கல்யாணம் வேறு நடக்க வேண்டும் அதற்கும் நானே கடனாக கொடுக்கிறேன். அதற்கு முன் உன் பாக்கியைத் தீர்த்து விடு. உன் நேர்மை எனக்குத் தெரியாதா? வியாபாரத்தில் போட்டுப் புரட்ட எனக்கும் கொஞ்சம் பணம் கிடைத்துக் கொண்டிருந்தால்தானே நல்லது. இந்தத் தடவை வாங்கியதையும் சேர்த்து கொடுத்து விடு. கல்யாணத்திற்கு நிறைய வாங்க வேண்டி இருக்கும். கவலைப்படாதே நான் அப்போது உனக்கு வேண்டியதைக் கடனாகக் கொடுக்கிறேன்'' என்றான்.

அன்று மாலையே வேலப்பன் பசுபதியின் கடைக்கு வந்து அவன் அதுவரை கொடுக்க வேண்டிய பணத்தைப் பைசா பாக்கி இல்லாமல் கொடுத்து விட்டான். பிறகு அவன் ''அடுத்த மாதம் வந்து கல்யாணத்திற்கு வேண்டிய மளிகை சாமான்களை வாங்கிப் போகிறேன்'' என்று கூறிவிட்டுச் சென்றான். பசுபதியும் அவனுக்கு வணக்கம் போட்டு அனுப்பி வைத்தான்.

தங்கப்பன் ஆச்சரியப்பட்டுப் போனான். வேலப்பன் அவ்வளவு விரைவில் பாக்கியைத் தீர்த்து

விட்டது கண்டு அதற்கு என்ன காரணம் என்று யோசிக்கலானான். அப்போது பசுபதி "இவனிடம் பணம் இல்லாமல் இல்லை. ஆனால் நம்மை ஏமாற்ற பார்த்தான். அவனிடம் நயமாய்ப் பேசி கறக்கிற விதத்தில் கறந்து விட்டேன், பார்த்தாயா?" என்றான்.

அடுத்த மாதம் வேலப்பன் ஒரு நீண்ட பட்டிலை எடுத்துக் கொண்டு பசுபதியின் கடைக்கு வந்தான். அவன் அந்த பட்டியலை பசுபதியிடம் கொடுக்கவே அவனும் அதை வாங்கிப் பார்த்து விட்டு "அடடா! இதிலுள்ள பல சாமான்கள் என்னிடம் இல்லையே, மேலும் இப்போது எனக்கும் கொஞ்சம் பணமுடை. சரக்குகள் வாங்கக் கூடப் பணம் இல்லாது தவிக்கிறேன். சமயத்தில் உனக்கு உதவ முடியாமல் போவது பற்றி வருந்துகிறேன். இந்தத் தடவை வேறு யார் கடையிலாவது வாங்கிக் கொள். கோபித்துக் கொள்ளாதே. என் நிலை இன்று அப்படிப்பட்டது" என்றான்.

வேலப்பனுக்கு பசுபதியின் உள் நோக்கம் புரிந்து விட்டது. அவன் ஏமாற்றம் அடைந்தவனாய் அங்கிருந்து சென்றான். தங்கப்பனுக்கு பசுபதியின் வியாபார தந்திரம் நன்கு புரிந்தது.

சில நாட்களானதும் பசுபதி தங்கப்பனிடம் "வியாபாரத்தில் எப்படியெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்பதை நீ போதிய அளவிற்குப் பார்த்துத் தெரிந்து கொண்டு விட்டாய். இனி நீ உன் ஊருக்குப் போய் வியாயாரத்தைக் கவனி" என்றான்.

தங்கப்பனும் பசுபதியை வணங்கி நன்றி செலுத்திவிட்டுத் தன் ஊருக்குச் சென்றான். அவன் பசுபதியைப் போலவே தன் கடையையும் நடத்தி வரவே நல்ல லாபம் கிடைக்கலாயிற்று. மாரிசாமியும் அது கண்டு மகிழ்ந்து போனான்.



# சொன்னதை மறந்தனையா?

மேட்டூர் அரசாங்க அலுவலகத்தில் செந்தில் புதிய கணக்கனாகச் சேர்ந்தான். அவன் பக்கத்தில் அமர்ந்து வேலை செய்யும் தருமன் அவனது நண்பனானான். முதல் நாளே அவன் செந்திலிடம் "ஜாக்கிரதை! இந்த அலுவலகத்தில் உள்ளவர்கள் யாரிடமாவது பணம் இருப்பதைப் பார்த்து விட்டால் கடன் கேட்டு வாங்கிக் கொண்டு போய் விடுவார்கள். பிறகு அந்தப் பணம் திரும்பி வராது" என்று எச்சரித்தான்.

செந்தில் முதல் சம்பளம் வாங்கினான். யாரும் அவனிடம் கடன் கேட்க வரவில்லை. இப்படியாக மூன்று மாதங்கள் கழிந்தன. ஒருநாள் செந்திலும் தருமனும் கடைக்கு போய்த் தம்க்குத் தேவைப்பட்ட சாமான்களை வாங்கினார்கள். அப்போது தருமன் வாங்கிய சாமான்களின் விலை இருநூற்று ஐம்பது ரூபாய்க்கு வந்து விட்டது. அவனிடம் இருநூறு ரூபாய்களே இருந்தன!

அவன் செந்திலிடம் "கடைக்காரருக்கு கொடுக்க ஐம்பது ரூபாய் குறைகிறது. உன்னிடம் இருந்தால் அந்தத் தொகையை எனக்குக் கடனாகக் கொடு. நாளை அலுவலகம் வரும்போது கொடுக்கிறேன்" என்றான். செந்திலும் அவனுக்கு ஐம்பது ரூபாயைக் கொடுத்தான்.

தருமன் மறுநாளும் ஐம்பது ரூபாயைக் கொடுக்கவில்லை. பல நாட்களாகியும் அதுபற்றி பேசக் கூட வில்லை. பொறுத்துப் பார்த்த செந்தில் தருமனிடம் "நீ போன மாதம் என்னிடம் கடனாக வாங்கிய ஐம்பது ரூபாயைத் திருப்பிக் கொடுக்கவில்லையே, எப்போது கொடுக்கப் போகிறாய்?" என்று கேட்டான்.

தருமனும் "உன்னை முதல் நாள் பார்த்த போது நான் சொன்னது உனக்கு நினைவில்லையா? நீ நம் அலுவலகத்திலுள்ள யாருக்காவது கடன் கொடுத்தால் அது திரும்பி வராது என்றேனே" என்றான். செந்தில் திகைத்துப் போனான்!






9

*[விநோதன் ஒரு அதிசயப் பிறவி. அவன் கடல் கொள்ளைக்காரர்களிடம் அகப்பட்ட ஐந்து சிறுவர்களை சுகுமாரனைக் கொண்டு காப்பாற்றி, கொள்ளைக்காரர்களை மன்னனிடம் ஒப்படைத்தான். இன்னொரு கொள்ளைக் கூட்டம் மலைத்தீவிற்குப் போய் அங்கு குடி மயக்கத்தில் விழ, விநோதன் சுகுமாரனையும் அவனது நண்பர்களையும் நிறையப் பணமும் பொருளும் இருந்த கொள்ளைக்காரர்களின் கப்பலில் ஏற்றி அனுப்பினான். பிறகு-]*

சுகுமாரனும் ஐந்து சிறுவர்களும் கப்பலேறிச் சென்றதை அந்த ஊர்க்காரர்கள் கண்டார்கள். அவர்கள் அது பற்றி ஆச்சரியப்படவில்லை ஏனெனில் அதற்கு முன் அவர்கள் கப்பலில்போய் கொள்ளைக்காரர்களைப் பிடிக்க உதவியதை நினைத்துப் பார்த்தார்கள். அதனால் அவர்கள் இன்னமும் என்னென்ன அதிசயச் செயல்களைப் புரியப் போகிறார்களோ என்று தமக்குள் பேசிக் கொண்டனர்.

கப்பல் ஒன்று தொலைதூரத்தில் தென்பட்டதைக் கண்டு கரையில் நின்ற சிலர் "அதோ! சுகுமாரனும் அவனது நண்பர்களும் திரும்பி வந்து கொண்டிருக்கிறார்கள்" என்று உரக்கக் கூவினார்கள் அந்தக் கூச்சலைக் கேட்டு கரை ஓரம் வசித்த ஊர் ஜனங்கள் வந்து.



கூடி விட்டார்கள்.

கடற்கரையிலிருந்து சற்று தூரத்தில் ஒரு அழகிய மாளிகை இருந்தது. அதில் தங்க அந்நாட்டு மன்னன் அவ்வப்போது வருவது வழக்கம். இந்த நிகழ்ச்சி நிகழ்ந்தபோது அவன் அந்த மாளிகையில் வந்து தங்கி இருந்தான். சுகுமாரன் ஒரு கப்பலில் வந்து கொண்டிருக்கிறான் என்ற செய்தி அவனுக்கும் கிடைத்தது.

அவன் தன் ஆட்களோடு கடற்கரைக்கு வந்தான். மன்னன் வருவதைக் கண்ட மக்கள் கூட்டம் அவனுக்கு மரியாதை செலுத்தியது. அந்த ஊரின் நிர்வாக அதிகாரி மன்னனை வணங்கி நின்றான். மன்னனும் அவனிடம் "சுகுமாரன் கப்பலில் வந்து கொண்டிருக்கிறானாமே! அவன் எங்கே போனான்? எதற்காகப் போனான்?" என்று கேட்டான்.

அதிகாரியும் "எங்களுக்குத் தெரியாது அரசே. அவனும் ஐந்து சிறுவர்களும் திடீரென்று கிளம்பிப் போனதுதான் தெரியும். விவரங்கள் எதுவும் யாருக்கும் தெரியவில்லை" என்றான்.

அப்போது கப்பலில் ஒருமுனையில் உட்கார்ந்திருந்த விநோதன் கடற்கரையில் ஒரு பெரிய கூட்டம் சேர்ந்து நிற்பதைக் கண்டான். அவன் சுகுமாரனிடம் "நண்பா! இனி நான் விடை பெறுகிறேன். இந் நாட்டு மன்னன் மிகவும் நல்லவன். இந்தக் கப்பலில் உள்ளவற்றை எல்லாம் கொடுத்து, இவற்றை ஏழை எளியவர்களின் நலனுக்கு பயன் படுத்தும்படிச் சொல்." என்றான்.

சுகுமாரனும் "எங்களை விட்டுப் போகத்தான் வேண்டுமா?" என்று கேட்டான். விநோதனும் "கவலைப் படாதே. உன் மனது எப்படி வாடுகிறது என்பது எனக்குத் தெரியும். ஆனால் நீ நினைத்ததுமே நான் வந்து விடுவேனே. அதனால் நீ சந்தோஷமாகச் செல். உங்களுக்கு நன்மையே ஏற்படும். மலைத் தீவிலிருந்து இந்த மாபெரும் நிதியைக் கொண்டு வந்த மகிழ்ச்சியில் அங்கு மயக்கம் அடைந்து விழுந்து கிடைக்கும் அந்த ஐந்து கொள்ளைக்காரர்

களை மறந்து விடாதீர்கள். அங்கு உண்ண எதுவும் கிடைக்காமல் பட்டினியால் இறந்து விடுவார்கள். அவர்களது உயிரைக் காப்பாற்றும் படி மன்னனிடம் கூறு" எனச் சொல்லி விட்டுக் கடலை நோக்கி கையை ஆட்டினான்.

மறுநிமிடம் கடலில் விசித்திர மீன்தோன்றியது. விநோதன் அதன் மீது அமர அது அவனோடு வேக மாகச் சென்று விட்டது. சுகுமார னின் கப்பலும் கரையை நோக்கிச் சென்றது. கரையில் நின்றவர்கள் "அதோ! சுகுமாரனும் அவனது நண்பர்களும் வந்து விட்டார்கள்" எனக்கூறி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

சுகுமாரன் கரை இறங்கியதும் மன்னனைக் கண்டதும் அவனருகே சென்று மரியாதை செலுத்தி வணங்கி நின்றான். அவன் மலைத் தீவுக்குப் போனதையும் அங்கிருந்து கப்பலில் தான் கொண்டு வந்துள்ள செல்வத்தையும் அது தனக்குக் கிடைத்த விதத்தையும் சுருக்கமா கக் கூறினான். மன்னனும் கப்ப லுக்குள் போய் அதிலிருந்த விலை மிகுந்த நகைகளையும் மற்றும் பல பொருள்களையும் கண்டு ஆச்சரி யம் அடைந்தான்.

மன்னன் சுகுமாரனைப் பாராட் டியவாறே. "ஆகா! எவ்வளவு நிறைய நமக்குப் பணம் கிடைத் துள்ளது! இதனால் நம் நாட்டி லுள்ளவர்கள் யாவரும் சுகமாக வாழலாம்" என்றான்.

சுகுமாரன் அந்தச் செல்வத்தை ஏழை எளியவர்களுக்குப் பயன்பட





உபயோகிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். மன்னனும் அவ்வாறே செய்வதாக வாக்களித்தான். அதற்கான திட்டம் வகுக்கும்படியும் சுகுமாரனிடம் கூறினான்.

சுகுமாரனும் "இவற்றை இங்குள்ள தங்கள் மாளிகையிலேயே பத்திரமாக வைத்திருங்கள். அடுத்து இன்னொரு வேண்டுகோள்". எனவே மன்னனும் "என்ன அது?" என்று கேட்டான். சுகுமாரனும் "மலைத் தீவில் ஐந்து கொள்ளைக்காரர்களை மயக்கமடைந்த நிலையில் விட்டுவிட்டு வந்தோம். அவர்கள் அங்கே உண்ண எதுவும் கிடைக்காமல் துடிதுடித்து இறந்து விடுவார்கள். அவர்களைக் காப்பாற்றி இங்கே கொண்டுவர வேண்டும்" என்றான்.

மன்னனும் "அவர்களோ கொள்ளைக்காரர்கள். இங்கே கொண்டு வந்தாலும் அவர்களுக்கு நான் மரண தண்டனை விதிக்கத்தான் போகிறேன். அதனால் அங்கேயே அவர்கள் சாகட்டும். அவர்கள் பல கொடிய செயல்களைப் புரிந்திருக்கிறார்கள். அவர்களால் எவ்வளவோ குடும்பங்கள் அழிந்திருக்கின்றன. அவர்கள் அங்கே உண்ண உணவும் குடிக்க நீரும் இல்லாமல் துடிதுடித்து மடிவதே அவர்களுக்கு ஏற்ற தண்டனை" என்றான்.

சுகுமாரனும் "அவர்கள் துடி துடித்து மடிவதைவிட இங்கே கொண்டு வந்து சட்டப்படி விசாரணை நடத்தி தண்டிக்கலாம். ஆனால் அவர்கள் இப்படிப்பட்ட நிலையில் இருக்கிறார்கள் என்று தெரிந்தும் துடிதுடிக்க அவர்களை மடிய விடுவது மனிதாபிமானம் இல்லையே" என்றான். மன்னனும் "சரி, உன் விருப்பப்படியே அவர்களைப் பிடித்து இங்கே கொண்டு வரலாம்" என்றான்.

கப்பலிலிருந்த பொருள்கள் எல்லாம் சற்று நேரத்துள் மன்னனின் மாளிகைக்குக் கொண்டு சேர்க்கப் பட்டன. மன்னனின் கட்டளையின்படி தலைநகரிலிருந்து ஒரு படைத் தலைவனும் ஐம்பது வீரர்களும் வந்து சேர்ந்தார்கள். அவர்களுக்கு

இரு கப்பல்கள் கொண்டு வரப் பட்டன. அவற்றில் அவர்கள் ஏறிக் கொண்டார்கள். சுகுமாரன் தான் வந்த கப்பலில் தன் நண்பர்களு டன் ஏறிக்கொண்டு வழிகாட்டிக் கொண்டு முன்னே செல்ல, வீரர் களின் கப்பல்களும் அதன் பின் சென்றன.

அக்கப்பல்கள் மலைத் தீவை அணுகிய போது நன்கு விடிந்து விட்டது. கப்பல்களை நிறுத்தி நங் கூரம் பாய்ச்ச வேண்டிய இடத்தை சுகுமாரன் காட்டினான். அங்கிருந்து சற்று தூரத்தில்தான் உயர்ந்த பாறை கள் இருந்தன. சுகுமாரனும் படைத் தலைவனும் சுற்றிலும் பார்த்தார் கள்.

அப்போது ஒரு பெரிய கல் அவர்கள் முன் வந்து விழுந்தது. சட்டென நகர்ந்த படைத் தலைவன் "அந்த முட்டாள்கள் நம்மைத் தாக்க ஆரம்பித்து விட்டார்கள்" என்று கூறிவிட்டுப் பாறைகளின் பக்கம் திரும்பி "நீங்கள் எவ்வளவு தான் முயன்றாலும் எங்களிடமி ருந்து தப்ப முடியாது. நீங்கள் ஐந்து பேர்கள். நாங்களோ ஐம்பது வீரர்கள். மரியாதையாக வந்து எங்களிடம் சரணடைந்து விடுங் கள். இல்லாவிட்டால் உங்களைப் பிடித்து கடுமையாக தண்டிப் போம்" என்று உரக்கக் கூறினான். அதன் பிறகும் கற்கள் அம்புபோல வந்து விழலாயின. அதைக்கண்ட படைத் தலைவன் தன் வீரர்களிடம் "உம். அம்புகளை எய்யுங்கள்" என்று கட்டளை இட்டான். வீரர் களும் அம்புகளை எய்யலானார்





கள். இதனால் கற்கள் வந்து விழு வது நின்றது.

அப்போது படைத் தலைவன் சுகுமாரனிடம் "நீயும் உன் நண்பர் களும் இங்கேயே மறைந்து இருங் கள். நான் வீரர்களுடன் போய் அந்த ஐந்து கொள்ளைக்காரர்களை யும் பிடித்துக் கொண்டு வருகி றேன்" என்று கூறிவிட்டு வீரர் களோடு பாறைகள் நிறைந்த பகு திக்குச் சென்றான்.

அங்கு போய் படைத் தலைவன் மீண்டும் ஒருமுறை கொள்ளைக் காரர்களை எச்சரித்தான். ஆனால் எங்கிருந்தும் எவ்வித பதிலும் கிடைக்கவில்லை. வீரர்கள் பாறை களின் மீது ஏறி நின்று சுற்றிலும் பார்த்தார்கள். ஆனால் யாரும் அவர்களது பார்வையில் தென்பட வில்லை.

படைத் தலைவனும் "அவர்கள் ஏதோ ஒரு குகைக்குள் ஒளிந்து கொண்டுதான் இருக்க வேண்டும். நாம் எட்டு பிரிவுகளாக பிரிந்து தேடுவோம். பத்துப் பேர்கள் இங் கேயே நிற்கட்டும்" என்றான். அதன்படி ஐந்தைந்து பேர்களாக கொண்டு எட்டுக் குழுக்கள் கொள்ளைக்காரர்களைத் தேடக் கிளம்பின.

சுகுமாரனும் அவனது நண்பர் களும் தாம் இருந்த இடத்தில் இருந்து கொண்டு நடப்பதை எல் லாம் பார்த்துக் கொண்டிருந்தார் கள். அப்போது "சுகுமாரா" என்று யாரோ கூப்பிடுவது கேட்டுக் குரல் வந்த திசையை அவன் பார்த்தான். அங்கே விநோதன் நின்று கொண்டி ருந்தான்.

விநோதனும் "நண்பா! அந்தக் கொள்ளைக்காரர்கள் கிழக்கு திசை யில் உள்ள சுரங்கத்தில் ஒளிந்து கொண்டிருக்கிறார்கள். நீ போய் படைத் தலைவனிடம் கூறி தாமதிக் காமல் உடனே அங்கே போகச் சொல்" என்றான். சுகுமாரனும் வேகமாக ஓடிப் படைத் தலைவன் இருக்கும் இடத்தை அடைந்தான்.

சுகுமாரனைக் கண்ட படைத் தலைவன் "நீ ஏன் இங்கு வந்தாய்? உன்னை அங்கேயே மறைந்திருக் கும்படித்தானே சொன்னேன்" என்

றான் சற்றுக் கடுமையாக. சுகுமாரனோ "ஒரு முக்கியமான விஷயத்தைத் தெரிவிக்க வந்தேன். நாம் தேடும் கொள்ளைக்காரர்கள் கிழக்கு திசையில் உள்ள சுரங்கத்தில் இருக்கிறார்கள்" என்றான்.

படைத் தலைவன் ஆச்சரியத்தோடு "இதை நீ எப்படி அறிந்தாய்?" என்று கேட்கவே சுகுமாரனும் "இதற்கு முன் இத்தீவைப் பற்றியும் கொள்ளைக்காரர்களைப் பற்றியும் எப்படி அறிந்து கொண்டேனோ அதே விதத்தில்தான் இதையும் தெரிந்து கொண்டேன்" என்றான். படைத் தலைவன் சுகுமாரன் கூறுவது உண்மையே என நினைத்து தன்னோடு பத்து வீரர்களை அழைத்துக் கொண்டு கிழக்கு திசையில் சென்றான்.

அவர்கள் அந்த சுரங்க வாசலை அடைந்ததும் படைத் தலைவன் "நீங்கள் இங்கே ஒளிந்து கொண்டிருப்பது எங்களுக்குத் தெரிந்து விட்டது. மரியாதையாக வெளியே வரப் போகிறீர்களா அல்லது எங்களிடம் அகப்பட்டுக் கொண்டு மடியப் போகிறீர்களா?" என்று உரத்த குரலில் கேட்டான். அப்போது கொள்ளைக்காரத் தலைவன் "நீயோ உன் ஆட்களோ இதனுள் வந்தால் உயிருடன் திரும்பிப் போக முடியாது. அதைத் தெரிந்து கொள்" என்றான் பதிலுக்கு.

அப்போது சுரங்கத்தில் இடி இடிப்பது போன்ற ஒரு குரல் "இதனுள் யார் வருவது? ஒரு அடி நகர்ந்தால் இங்குள்ள விஷப் பாம்புகள் கடித்து விடும் ஜாக்கிரதை" என்றது. அதைக் கேட்ட கொள்ளைக்காரர்கள் பயந்து நடுங்கியவாறே சுரங்கத்திலிருந்து வெளியே ஓடி வந்தார்கள். அவர்களைப் படைத் தலைவனும் அவனது வீரர்களும் தப்பி ஓடி விடாமல் பிடித்து இழுத்துக்கொண்டு அவர்கள் கப்பல்களை நோக்கிச் சென்றார்கள்.

(தொடரும்)





# மேலில் யார்?

தன் முயற்சியால் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ எடுத்த வேலையைச் செய்து முடிக்க தொடர்ந்து முயன்று வருவதைப் பாராட்டுகிறேன். இந்த பயங்கர நள்ளிரவில் நீ படும் சிரமம் தெரியாதிருக்க உனக்கு ஒரு விறகு வெட்டியின் மகளின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

ஒரு காட்டில் ஒரு விறகு வெட்டி இருந்தான். அவன் தன் மனைவியை இழந்த பின் மகளான நீலாவை வளர்த்து வந்தான். நீலாவும் தன் தந்தையை கவனித்துக் கொண்டும்

## வேதாளம் சொல்லும் கதை



வீட்டு வேலைகளை எல்லாம் நன்கு செய்தும் தன் தந்தைக்கு எவ்வித சிரமமும் ஏற்படாமல் பார்த்துக் கொண்டாள். நீலா வின் பாட்டி அதே காட்டில் வேறு ஒரு இடத்தில் தனியாக வாழ்ந்து வந்தாள்.

ஒரு நாள் விறகு வெட்டி தன் மகளிடம் "நீலா! நீ இங்கேயே இருப்பது அலுக்கவில்லையா! சற்று தூரத்தில்தானே உன் பாட்டி தனி யாக இருக்கிறாள். அவளைப் போய்ப் பார்க்க வேண்டும் என்ற ஆசை உனக்கு இல்லையா? நீ இன்றே அங்கே போ. நீ உன் பாட்டியைப் போய்ப் பார்ப்பதோடு அங்கு பத்து நாட்கள் இருந்துவிட்டு வருகிறாயா? அவளுக்கும் சற்று ஆறுதலாக இருக்கும்" என்றான். நீலாவோ "நான் பத்து நாட்கள் இங்கே இல்லாவிட்டால் உங்களை யார் பார்த்துக் கொள்வார்கள்?" என்று தன் கவலையை வெளிப் படுத்தினாள். விறகு வெட்டியோ "நீ கவலைப்படாதே. நான் சமாளித் துக் கொள்வேன்" என்று கூறி அவளைப் பாட்டி இருக்கும் இடத் திற்கு அனுப்பி வைத்தான்.

நீலாவுடன் அவள் வளர்த்து வந்த மைனாவும் சென்றது. அவ ளோடு மற்றும் பல பறவைகள் செல்லவே அவற்றை எல்லாம் வரக்கூடாது என்று கூறி அவள் தடுத்து விட்டாள். ஆனாலும் ஒரு மரங்கொத்தியும் ஒரு கவுதாரியும் அவள் பின் சென்றன. அக்காட்டி லுள்ள பறவைகளை நீலா மிகவும் நேசித்து வந்தாள். அவையும் அவளி டம் அன்பு கொண்டிருந்தன.

பாட்டியின் குடிசையை நீலா அடையுமுன்பே மைனா முன்னதா கப் போய் "பாட்டி! விருந்தாளி கள் வருகிறார்கள்" எனக் கூறவே பாட்டியும் "ஓ! நீலா வருகிறாளா? அவளுக்கும் சேர்த்து ரொட்டி சுட்டால் போயிற்று" என்றாள். சற்று நேரத்தில் நீலாவும் அங்கு வந்து சேர்ந்தாள்.

பாட்டியும் "வா நீலா! சௌக்கி யமாக இருக்கிறாயா? உன்னைப் பார்த்து எவ்வளவோ நாட்களாகி விட்டது. நானும் உன்னைப் பார்க்க

ஆசைப்பட்டுக் கொண்டுதான் இருந்தேன். என்னால் அவ்வளவு தூரம் நடந்து வர முடியவில்லை. இப்போது நீயே வந்து விட்டாய். உன் தந்தை நலமா? உன் கல்யாணத்தைப் பற்றி ஏதாவது முயற்சி செய்கிறானா?" என்று கேட்டாள். நீலாவும் "இந்தக் காட்டில் யார் கிடைப்பார்கள்? கல்யாணம் எல்லாம் மெதுவாகத்தான்" என்றாள் சிரித்துக் கொண்டே.

அவள் சுற்றிலும் பார்த்தபோது மூன்று பழைய மரக்கட்டில்கள் இருப்பதை கண்டு "இதென்ன பாட்டி! மூன்று கட்டில்கள் எதற்கு? நீ ஒருத்திதானே இங்கே இருக்கிறாய்?" என்று கேட்டாள்.

பாட்டியும் "அது ஒரு பெரிய கதை. விவரமாக சொல்கிறேன் இப்போது நீ களைத்துப் போயிருக்கிறாய். சாப்பிட்டு விட்டுப் படுத்துத் தூங்கு" என்றாள். நீலாவும் குளித்து சாப்பிட்டுவிட்டு "பாட்டீ! இப்போது சொல் கட்டில்களைப் பற்றி" என்று கேட்கவே பாட்டியும் கூறலானாள்.

இந்த நாட்டு மன்னனுக்கு மூன்று புதல்வர்கள். மூவரும் ஒரே சமயத்தில் பிறந்தவர்கள். அவர்களது தாய் அவர்களைப் பெற்றதுமே இறந்து விட்டாள். மன்னன் அவர்களை வளர்த்து வருகிறான். ஒருவன் பெயர் பலவீரன். இரண்டாவதவன் பெயர் அதிவீரன். மூன்றாவதவன் பெயர் மகாவீரன். தாயில்லாத மூவரையும் மன்னன் அருமை பெருமையாக வளர்க்கவே அவர்கள் எந்த வேலையிலும் நாட்டம் கொள்ளாமல் இருந்து வந்தார்கள்.



இதைக் கண்ட மன்னன் பெரிதும் கவலை கொண்டான். பெரியவர்களானதும் அவர்களில் யாராவது ஒருவனிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைக்க வேண்டுமே, என்ன செய்யலாம் என்று யோசிக்கலானான். பல வேலைகளில் அவர்களை ஈடுபடுத்த முயன்றும் தோல்வியுற்ற அவன் முடிவில் தன் மைந்தர்களிடம் "உங்களில் யார் முதலில் திருமணம் செய்து கொள்கிறானோ அவனுக்கே இந்த நாட்டை அளிப்



பேன்'' என்று சொல்லிப் பார்த் தான். பல அரசகுமாரிகளின் உரு வப்படங்களையும் வரவழைத்துக் காட்டினான். அவர்கள் அவற்றை எல்லாம் நிராகரித்தார்கள்.

அப்போது மன்னன் ''சரி. அரச குமாரியாக இல்லாது போனாலும் வேறு எந்தப் பெண்ணையாவது யார் முதலில் மணந்து கொண்டு வருகிறானோ அவனுக்கே இந்த நாடு என்று கூறி அவர்களை அரண் மனையிலிருந்து அனுப்பினான். அவர்கள் தினமும் அங்கிருந்து கிளம்பி இந்தக் காட்டிற்கு வந்து இங்கு சாப்பிட்டுவிட்டு இந்தக் கட்டில்களில் படுத்துத் தூங்கிவிட்டு மாலையானதும் அரண்மனைக்குத் திரும்பிப் போய் விடுவார்கள்.

அவர்கள் கொண்டு வரும் உணவில் எனக்கும் சாப்பிடக் கொடுக்கிறார் கள். அதனால் பகலில் நான் சமைப் பது இல்லை.''

இப்படி பாட்டி கூறியதும் நீலா ''சரி பாட்டி. நாளை அவர்களை பற்றி விவரமாகத் தெரிந்து கொள் கிறேன். இப்போது ஒரு கட்டிலில் படுத்துத் தூங்குகிறேன்'' என்று கூறி அந்தப் பழைய மரகட்டில்களில் ஒன்றில் படுத்துக் கொண்டாள்.

அவளால் அந்தக் கட்டிலில் படுத்துத் தூங்க முடியவில்லை. ஏனென்றால் அதில் மூட்டைப்பூச்சி கள் நிறைய இருந்தன. அவை அவ ளைக் கடித்துத் தூங்க விடாமல் செய்தன. காலையில் எழுந்து நீலா பாட்டியிடம் ''அந்த அரச குமாரர்களின் உடம்பு மரத்தால் செய்யப்பட்டதா என்ன? மூட்டைப் பூச்சி கடியையும் பொருட்படுத்தா மல் கட்டில்களில் படுத்துத் தூங்கு கிறார்கள் என்றால் அவர்கள் எதைப் பற்றியும் கவலைப்படுவதில்லை என்று நன்கு தெரிகிறது'' என்றாள்.

நீலா இரவு முழுவதும் தூங்கா மல் மூட்டைப் பூச்சிக் கடியால் அவஸ்தைப்பட்டதைக் கேட்ட மரங் கொத்தி கவுதாரியுடன் சேர்ந்து கட்டில்களில் இருந்த மூட்டைப் பூச்சிகளை எல்லாம் தம் அலகு களால் குத்திக் கொன்றது. மைனா கூறியதன் பேரிலேயே அவை அவ் வாறு செய்தன.

நீலா வீட்டிலும் மற்ற பொருள் களில் மீதும் படிந்த தூசியைத் தட்டி ஒட்டடைகளை எல்லாம் போக்கினாள். வீட்டைக் கழுவித் துடைத்தாள். சன்னல்களில் திரை களைக் கட்டி மலர்மாலைகளைத் தொங்கவிட்டாள். உச்சி வேளை யின் போது மூன்று அரசகுமாரர் களும் தம் குதிரைகளின் மீது ஏறி சவாரி செய்தவாறே காட்டில் பாட்டி இருக்கும் இடத்திற்கு வந் தார்கள்.

அவர்கள் வருவது பற்றி மைனா நீலாவை எச்சரிக்கவே நீலாவும் அவர்களது கண்களில் படாமல் மறைந்து கொண்டாள். மூன்று அரசகுமாரர்களும் பாட்டியின் வீட்டிற்குள் சென்றதும் அங்கு செய் யப்பட்ட மாறுதல்களை எல்லாம் கண்டு "இந்தப் பழங்கால வீட்டை இவ்வளவு அழகாக விளங்கச் செய் தவர் யார்?" என்று பாட்டியிடம் கேட்டார்கள். பாட்டியும் "என் பேத்தி நீலா வந்திருக்கிறாள். அவள் தான் இப்படி எல்லாம் செய்தது" என்றாள்.

அப்போது பலவீரன் "உன் பேத்தியா? இப்படி அழகு பெற இந்த இடத்தை மாற்றிய அவளை நான் காண வேண்டும்" என்றான். அப்போது சன்னலின் அமர்ந்தி ருந்த மைனா "இவ்வளவு சீக்கிரத் தில் எங்கள் நீலாவைப் பார்க்க முடியாது, இளவரசே! அதற்கு நீங் கள் கொஞ்ச காலம் காத்திருக்க வேண்டும். எந்த ஒரு அரிய பொரு ளையோ மனிதரையோ காண வேண்டும் என்றால் அதற்கான





வேளை வரவேண்டும். கூடவே அதிர்ஷ்டமும் வேண்டும்" என்றது.

ஒரு மைனா பேசுவது கண்டு மூன்று அரசகுமாரர்களும் ஆச்சரியப்பட்டார்கள். பாட்டியிடம் அதைப் பற்றிக் கேட்கவே அவளும் " இது என் பேத்தி நீலாவுடன் வந்த மைனா. அவள் பறவைகளுடன் பழகி அவை மனிதர்களைப் போலப் பேசப் பழக்கி வைத்திருக்கிறாள்" என்றாள். பிறகு அவர்கள் கொண்டு வந்த உணவிலிருந்து கொஞ்சம் எடுத்து பாட்டி நீலாவுக்குக் கொடுத்தாள். நீலா அந்த அரசகுமாரர்களுக்கு ராகிக் கூழ் தயாரித்துப் பாட்டியிடம் கொடுத்து அனுப்பினாள்.

ஒருநாளும் அரண்மனையில் ராகி கூழ் தயாரிக்கப்பட்டதே இல்லை. அதைக் குடித்த அரசகுமாரர்கள் "ஆகா! அற்புதம் இன்றுவரை இப்படி ருசியான ஒரு உணவுப் பொருளை நாங்கள் சாப்பிட்டதே இல்லை" என்றார்கள். அப்போது பாட்டி "எங்கள் நீலா இதைவிட ருசியாக இன்னும் பலவற்றை சமைத்து வைக்கக் கூடியவள்" என்றாள்.

"அப்படியானால் உங்கள் நீலாவை நேருக்கு நேர் கண்டு பாராட்டுதல்களைத் தெரிக்க வேண்டும்" என்றான் அதிவீரன். அப்போது மைனா "எங்கள் நீலாவைப் பார்க்கச் சற்றுப் பொறுத்து இருக்கத்தான் வேண்டும்" என்றது. அன்று அரசகுமார்களால் நீலாவைப் பார்க்க முடியவில்லை. மாலையானதும் அவர்கள் அரண்மனைக்குச் சென்றார்கள்.

அரசகுமாரர்கள் மறுநாள் உச்சி வேளைக்குப் பாட்டியின் வீட்டிற்கு வந்தார்கள். அப்போது நீலா தோட்டத்தில் மலர் பறித்தவாறே பாடிக் கொண்டிருந்தாள். அவளது இனிய குரலைக்கேட்டும் அழகைக் கண்டும் மகிழ்ந்த அரசகுமாரர்கள் கைதட்டித் தம் பாராட்டுதல்களைத் தெரிவித்தார்கள்.

அவர்களைக் கண்டதும் நீலா வீட்டிற்குள் போய் விட்டாள். அரசகுமாரர்கள் ஒவ்வொருவனும் பாட்டியைத் தனியே கண்டு "உன் நீலாவை நான் மணந்து கொள்

கிறேன்'' என்றான். பாட்டியும் ''நீலாவின் அபிப்பிராயம் என்ன என்று கேட்கிறேன்'' என்றாள்.

பாட்டி கூறியதைக் கேட்ட நீலா ''பாட்டி! அந்த மூவரிடமும் நான் ஒரு கேள்வியைக் கேட்பேன். நான் எதிர்பார்க்கும் விடையை கூறுபவரை நான் மணந்து கொள்வேன். அதனால் அவர்கள் ஒவ்வொருவரும் தனியே வந்து சந்திக்கட்டும். அப்போது என் கேள்வியை நான் கேட்கிறேன்'' என்றாள். பாட்டியும் நீலா கூறியதை அவர்களுக்குத் தெரிவிக்கவே, நீலாவைக் காண முதலில் பலவீரன் சென்றான்.

அவனிடம் நீலா ''உங்கள் தந்தை நம் திருமணத்திற்கு ஒப்புதல் அளிக்காவிட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள்?'' என்று கேட்டாள். பலவீரனும் ''இதில் நீ சந்தேகப்படவே வேண்டாம். என்னை முழுமையாக நம்பு. ஒரு வேளை என் தந்தை ஏதாவது ஆட்சேபணை செய்தாலும் நான் அவருக்கு எடுத்துச் சொல்லி என் விருப்பத்திற்கு இணங்கச் செய்வேன்'' என்றான்.

அதற்குப்பின் வந்த அதிவீரனிடம் நீலா அதே கேள்வியைக் கேட்கவே, அவன் ''என் தந்தை சம்மதிக்காவிட்டால் நம் திருமணம் நடக்காமல் போய் விடலாம்'' என்றான். இதற்குப்பின் வந்த மகாவீரனிடமும் நீலா அதே கேள்வியைக்



கேட்கவே அவனும் ''என் தந்தை எதிர்த்தால் நான் நாட்டையும் அரண்மனையையும் துறந்து வெளி வந்து உன்னையே மணந்து கொள் வேன்'' என்றான்.

நீலா நான் இருந்த இடத்திலிருந்து வெளியே வந்து பலவீரனின் கழுத்தில் மலர் மாலையை அணிவித்து அவனைத் தன் கணவனாகத் தேர்ந்தெடுத்தாள்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''நீலா ஏன் பலவீரனைத் தேர்ந்தெடுத்தாள்? அவன் தன் தந்தையைத் தன் இஷ்டத்திற்குச் சம்மதிக்க வைக்க முடியும் என்ற காரணத்தாலா? அதிவீரன் தன் தந்தைக்கு எதிராக எதுவும் செய்வதற்கு இல்லை என்றானே. தந்தை

சொல் கேட்கும் அவனைத் தேர்ந் தெடுத்திருக்கலாமே. ஏன் அவள் அவ்வாறு செய்யவில்லை? அவளுக் காக நாடு அரண்மனை முதலிய வற்றை எல்லாம் துறக்கத் தயா ராக இருந்த மகாவீரனையும் ஏன் ஒதுக்கி விட்டாள்? அவள் பலவீர னைத் தேர்ந்தெடுத்தது எவ்விதத் தில் சரி? எனது இந்தக் கேள்வி களுக்கு நீ சரியான விடை தெரிந்து வைத்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நுறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் "நீலா ஏழைக் குடும்பத்தில் பிறந்தவள். அவளை மணக்க எந்த சாதாரண அரசாங்க ஊழியன் கூட முன் வரலாம். ஆனால் மூன்று அரசகுமாரர்கள் தன்னை மணக்க விரும்பியது கண்டு அவள் தன் எதிர்காலம் பற்றிச் சிந்தித்தாள். மூவரில் யார் ஆட்சிப் பொறுப்பை ஏற்கத் தகுதி பெற்றவன் எனக் காணவே அவள் அந்தக் கேள்வி யைக் கேட்டாள். மகாவீரன் பொறுப்பை உதறித் தள்ளிவிட்டு ஓடுபவன் எனக் கண்டு அவனை ஒதுக்கினாள். அதிவீரன் சுயமாக ஒரு முடிவிற்கு முடியாதவன் என் பதை அவன் கூறிய பதிலைக் கொண்டு அறிந்து அவனை நிரா கரித்தாள். பலவீரனோ தன் எண் ணத்தைக் கூறிப் பிறரை அதற்கு இனங்க வைக்க விளக்கம் கொடுப் பவன் எனக் கண்டாள். இது ஒரு அரசனிடம் இருக்க வேண்டிய இயல்பு. அரசகுமாரனை மணப் பது என்றால் நாட்டை ஆளத் தகுதி பெற்றவனைத்தான் மணக்க வேண்டும் என்று எண்ணியே அவள் பலவீரனைத் தேர்ந்தெடுத் தாள். அவளது முடிவு சரியா னதே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# அம்புலிமாமா அனுபந்தம்—37



நம் கடவுள்:

## மகாவீரர்

பழங்காலத்திலிருந்து ஜைன மதம் நம் நாட்டில் நிலைத்துள்ளது. ஜைன மதக் கொள்கைகளை மிகத் தீவிர மாகப் பரப்பியவர் வர்த்தமான மகா வீரர்.

வர்த்தமானர் கி.மு. 6வது நூற்றாண்டில் வைசாலி அரச குடும்பத்தில் பிறந்தார். தம் முப்பதாவது வயதில் உலக சுகபோகங்களை உதறித் தள்ளி தமக்குமுன் இருபத்து மூன்று தீர்த்தங்கரர்கள் போதித்த ஆன்மீக மார்க்கத்தை அவர் கடைப்பிடித்தார். ஜைனமதக் கோட்பாடுகளைத் தீவிர மாகப் பரப்பி இருபத்து நான்காவது தீர்த்தங்கரராக இவர் ஆனார்.

மானிட வாழ்வின் குறிக்கோள் நிர்வாண முக்தி... புலன்களை அடக்கி அஹிம்சையைக் கடைப்பிடித்தால் ஜன சமுதாயம் உலக பந்தங்களிலிருந்து விடுபட்டு நிர்வாண முக்தியை அடைய லாம் என அவர் போதித்து வந்தார்.

வர்த்தமான மகாவீரரை ஜைன ஆலயங்களில் வழிபடுகிறார்கள். தியான நிலையில் அவரை தங்க நிறத்தில் உருவாக்கி பூசிக்கிறார்கள். இவரோடு மற்ற தீர்த்தங்கரர்களை யும் ஜைனர்கள் கடவுளாகக் கருதி வணங்கி வருகிறார்கள். ஜைனர் களின் பழங்கால ஆலயங்களையும் தற்போது புதிதாக நிர்மாணிக்கப் படும் ஆலயங்களையும் நாடெங்கி லும் நாம் காண்கிறோம்.

செய்திகளில் சிறுவர்கள்:

# மிகச்சிறு வயது நாவலாசிரியை

இந்த ஆண்டு கிருஸ்மஸின் போது 'தி டைரி ஆப் எ செவந்த கிரேடர்' என்ற நாவல் வெளியாக உள்ளது. இதனைக் கடந்த ஆண்டு ஏழாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்த ஒரு சிறுமி ஆங்கிலத்தில் கோடை விடுமுறையில் எழுதினாளாம். இதனை ஒரு வெளியிட்டாக இந்த ஆண்டு கிருஸ்மஸ் போது வெளியிடப் போகிறார்கள்.



இந்த நாவலை ஆங்கிலத்தில் பதிமூன்று வயதான நயனதாரா நூரனி என்ற சிறுமி எழுதினாள் இவள் தற்போது கராச்சியில் பி.ஐ.சி உயர்நிலைப் பள்ளியில் ஒன்பதாவது வகுப்பில் படித்துக் கொண்டிருக்கிறாள். இந்நாளைய பாகிஸ்தான் சிறுவர் சிறுமியரிடையே இவள் ஒரு புத்துணர்ச்சியை ஏற்படுத்தி விட்டாள். இவளைச் சுற்றி கையெழுத்து வேட்டையாளர்கள் இருந்து கொண்டே இருக்கிறார்களாம். பாகிஸ்தானில் மிகக்குறைந்த வயது எழுத்தாளியாக இவள் விளங்குகிறாள். இவள் தன் பதினோறாவது வயதில் எழுதிய நாவலை இவளது பனிரெண்டாவது வயதிலேயே பிரசுரித்து விட்டார்கள்.

நூரனியின் தாய் ஒரு பள்ளி ஆசிரியை எழுத்தாளரும் கூட அவரிடம் கராச்சியிலுள்ள ஒரு வெளியிட்டகம் சிறுவர்களுக்கான ஒரு நூலை எழுதி தரும்படி வேண்டியது. ஆனால் எழுதமுடியவில்லை நயனதார்ரா யாரிடமும் சொல்லாமல் ஒரு நாவலை எழுதத் தொடங்கினாள். பாதி நாவலை எழுதியதும் அதனை அவள் ஒரு வெளியீட்டகத்திற்கு அனுப்பினாள். அந்த நிறுவனம் மற்ற பாதியையும் எழுதி அனுப்புமாறு தொலைபேசி வாயிலாக வேண்டியது. அவளும் ஒரு சில நாட்களில் 'ஏ ட்ரீம் கேம் ட்ரூ' என்ற தன் முதல் நாவலை எழுதி அனுப்பினாள். தன் சிற்றன்னையின் கொடுமைகளிலிருந்து தப்ப வீட்டை வீட்டு ஓடிய சிறும் ஒரு சர்க்கஸ் கம்பெனியில் சேர்ந்து அதிசய செயல்கள் புரிந்து முடிவில் தன்னைப் பெற்றெடுத்த தாயிடமே போய்ச் சேர்ந்தாள் என்பதே இந்நாவலின் கதை. இந்த முதல் நாவலே நயனதாராவிற்குப் பெரும்புகழைத் தந்து விட்டது.

நயனதாரா தன் வகுப்பில் மிக அதிக மதிப்பெண்கள் பெற்று முதலிடம் பெற்று வருகிறாள். இவள் கணிதம், விஞ்ஞானம் ஆகியவற்றை சிறப்புப் பாடங்களாகப் பயில்வதோடு எழுதுவதையும் தொடர்ந்து வருகிறாள். பதினாறு வயதான தன் தமக்கையிடம் இவள் யோசனை கேட்டும் வருகிறாள். இவளது தம்பி ஏழு வயதானவன். அவனும் அச்சாகுமுன் பிரதிகளை சரிபார்த்துக் கொடுக்கிறான். இவள் எழுதியதை இவளது தந்தை டைப் செய்து கொடுக்கிறார். அவர் ஒரு பத்திரிகையாளர். எனவே தந்தையும் மகளும் விவாதம் புரிந்து எழுதுவதில் தக்க மாற்றங்களைச் செய்து பிரசுரித்திற்கு ஏற்றபடி அமைக்கிறார்கள். இதுவே நயனதாராவின் வெற்றிக்கான இரகசியம்.

# இலக்கிய உலகம்

1. உலகில் மிகப்பெரும் அளவில் விற்பனையாகும் நாளேடு எது?
2. பழங்கால ரோமானியர் வௌவாலை அபசகுனமாகக் கருதினர்? தேனீக்களை எவ்வாறு கருதினார்கள்?
3. ஆங்கில மொழியில் மிகப்பிரபலமடைந்த பாட்டு எது?
4. கேரளாவில் பிறந்து தட்சசீலத்தில் பயின்று கணிதமேதை ஆனவர்யார்? அவர் எப்படிப் புகழ் பெற்றார்?
5. நம் தேசியக் கொடியின் நிறங்களை மேடம் காமா தேர்ந்தெடுத்தார். அமெரிக்க நாட்டுக் கொடியை ஒரு பெண் உருவகப்படுத்தினள். அவள் யார்?
6. இந்தியா தன் தபால்தலையில் முதன்முதலில் எந்த சோவியத் பிரமுகரின் படத்தை வெளியிட்டது?
7. இங்கிலாந்து ராணி விக்டோரியாவும் ரஷ்யாவின் பீடர் தி கிரேட்டும் ஒரு விஞ்ஞானியைக் காணச் சென்றார்கள். அந்த விஞ்ஞானி யார்? அவர் என்ன கண்டு பிடித்தார்?
8. அமெரிக்காவின் ஈஸ்டர் க்ளீவ்லாண்டிற்கு ஒரு சிறப்பு உண்டு. அது என்ன?
9. அமெரிக்க அதிபர் ஒருவர் தம்பதவி முடியும் வரை பிரம்மசாரியாகவே இருந்தார். அவர்யார்?
10. பூமியின் பதிவான மிக உயர்ந்த வெப்பநிலை என்ன?
11. மிகக் குறைந்த தட்பநிலை என்ன?
12. உலகில் ஏற்பட்ட மிகக்கொடிய இயற்கையின் இடர்பாடு எது?

## விடைகள்

1. ஜப்பானின் 'யோமியூரி ஷிம்பம்'
2. அதிர்ஷ்டம் தருபவை. தேவதைகள் எனக் கருதுகிறார்கள்.
3. 'ஹாப்பி பர்த்டே டு யூ' என்ற பாடல். 1936ல் எம்.பி. ஹில் எழுதிய பாடல் இது
4. ஆரியபட்டர். வட்டத்தின் சுற்றளவில் அதன் விட்டத்திற்கு உள்ள அளவு
5. பிலடெல்பியாவைச் சேர்ந்த பெட்சி ரோஜோ என்னும் தையல்க்காரி
6. மாக்ஸிம் கோர்க்கி. 1968ல் வெளியிடப் பட்ட தபால்தலை ஒன்றில்
7. ஆன்டென் லியோ வென் ஹோக், தொலை நோக்கி.
8. அவரது தந்தை க்ரோவர் அமெரிக்க அதிபராக இருந்த போது 'வெள்ளை மாளிகை'யில் பிறந்த ஒரே மகள்.
9. ஜேம்ஸ் புசாவன். இவருக்குப்பின் ஆப்ரகாம் லிங்கன் வந்தார்.
10. 57.8 சென்டிகிரேம். ஆப்பிரிக்காவில் அஜீஜாவில் 1922 செப்டம்பர் 13ந்தேதி பதிவானது.
11. −88.3 சென்டிகிரேட். அண்டார்டிகாவில். 1983 ஆகஸ்ட் 29ல் பதிவானது.
12. 1931ல் சீனாவின் ஹுவாங்கோ நதிவெள்ளப் பெருக்கு. இதில் 37 லட்சம் பேர்கள் அடித்துச் செல்லப்பட்டு உயிரிழந்தனர்.

# அம்புலிமாமா செய்திகள்

## மிகப்பெரிய குடும்பம்



ஒரே குடும்பத்தைச் சேர்ந்த எழுநூறு பேர்கள் உயிருடன் வாழ்ந்து வருகிறார்கள் என்றால் ஆச்சரியம்தானே! கேரள மாநிலத்தில் கோழிக்கோடு அருகே உள்ள குட்டி செரா என்ற இடத்தில் கோகாநீவிடு என்ற மகம்மதிய குடும்பம் உள்ளது. இது கின்னெஸ் புத்தகத்தில் இடம் பெற்றுள் ளது. செரியா ஆயிஷாபீ என்பவர் இக்குடும்பத்தில் மிகவும் வயதானவர். 99 ஆண்டுகள் நிறைந்தவர். இவரது மகன்கள், மகள், பேரன், பேத்தி கொள்ளுப்பேரன், எள்ளுப்பேரன், மற்றும் இதே வரிசைப் பேத்திகள் என்று 680 பேர்களுக்கு மேல் உள்ளனர். இவர்கள் யாவரும் ஒவ்வொரு ஆண்டி லும் ஆகஸ்ட் 15ந்தேதி ஒன்று கூடுகிறார்கள். ஜன நாயக முறையில் தம் குடும்பத் தலைவரைத் தேர்ந் தெடுக்கிறார்கள். 75 வயதான அகம்மது கோயா கடந்த 33 ஆண்டுகளாக இக்குடும்பத்தில் தலைவராக இருந்து வருகிறார்.

## பத்தாவது கிரகம்

சூரிய மண்டலத்தில் ஒன்பது கிரகங்கள் சுற்றி வருவ தாக இதுவரை நாம் நினைத்து வந்துள்ளோம். ஆனால் பத்தாவது கிரகமும் இருப்பதாக பிரிட்டிஷ் விஞ் ஞானிகள் மூன்று மாதங்களுக்கு முன் கண்டுபிடித் திருக்கிறார்கள். சூரிய கிரக மண்டலத்தி லுள்ள பூமியை விடப்பத்து மடங்கு பெரிதான ஒரு கிரகம் சுற்றி வருவதை இவர்கள் கண்டார்கள். தன்னைத் தானே சுற்றியும் மற்ற கிரகங் கள் போல வட்டப்பாதையில் இது சென்று வருகிறதாம். ஒருவிநாடிக்கு 1400 மெகா வாட்ஸ் அலைவேகத்தில் ரேடியோ அலை களை இது பரப்புகிறதாம். இதனை சக்தி வாய்ந்த ரேடியோ டெலஸ்கோப் வாயிலாக் கேட்டார்களாம். தனூர்ராசி நட்சத்திர மண்டலத்தின் அருகில் உள்ள இந்த கிரகத்திற்கு பி. எஸ். ஆர் 1829-10 எனப் பெயர் வைத்திருக்கிறார்கள்.





# விரலில் நகம்

சரிதா ஏழைக் குடும்பத்தில் பிறந்தவள். அவளுக்கும் ராஜனுக்கும் திருமணம் நடந்தது. ராஜன் வசதியான வீட்டில் பிறந்தவன். அவனது தந்தை கோவிந்தனும் தாயார் லட்சுமியும்தான் முனைந்து எப்படியோ அந்தக் கல்யாணத்ன்தைச் செய்து வைத்து விட்டார்கள்.

ராஜன் கள்ளம் கபடமற்றவன் சூது வாது தெரியாதவன். அப்பாவி. யார் எதைச் சொன்னாலும் அப்படியே நம்பி விடுபவன். தன் தாய் தந்தை கிழித்த கோட்டைத் தாண்டாதவன். அவனைத் திருத்த வேண்டியது சரிதாவின் பொறுப்பு என்று அவளிடம் கூறித்தான் கோவிந்தனும் லட்சுமியும் கோவிந்தனுக்கு அவளை மணமுடித்து வைத்தார்கள். சரிதாவும் அவ்வாறே செய்வதாகக் கூறினாள்.

அவள் சில மாதங்கள் வரை பொறுமையுடன் இருந்து தன் கணவனுக்கு உலக விவகாரங்கள் பற்றிக் கூறி அவன் எப்படி எல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்று சொல்லிப் பார்த்தாள். ராஜனுக்கோ அவள் சொன்னது எதுவும் புரியவில்லை. அவன் தன் போக்கிலேயே போய்க் கொண்டு இருக்கலானான்.

இதைக் கண்ட சரிதா "என் கணவர் தன் தாய் தந்தையரோடு சேர்ந்து இருந்தால் திருந்தவே முடியாது. அவர்களுக்கும் தம் மகன் பேரில் கொண்ட பாசத்தால் அவரை அப்பாவியாகவே வளர்க்க முயல்கிறார்கள். உலக ஞானம் பற்றி அவர்கள் தம் மகனுக்குக் கூறுவதில்லை. இப்படியே விட்டால் என் கணவரின் எதிர்காலம் என்ன ஆவது? அவரைத் த்னிக் குடித்தனம் போடச் சொல்லி பெற்றோர்

—பாபநாசம் சாமா—



களிடமிருந்து பிரித்து நான் அவருக்குச் சொல்ல வேண்டியதைப் பக்குவமாக எடுத்துக் கூற வேண்டும். அப்போதுதான் அவருக்கு உலகில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது புரியும். அதற்கு ஒரு வழி செய்கிறேன்'' என்று தீர்மானித்துக் கொண்டாள்.

ஒருநாள் மாலை லட்சுமி அடுத்த தெருவிலிருந்த சிவன் கோவிலுக்குப் போயிருந்தாள். கோவிந்தன் வயலிலிருந்து திரும்பவில்லை. ராஜன் மட்டும் தனியே வந்து கொண்டிருந்தான். சரிதா உடனே ஓடிப்போய் தன் கைவிரல் ஒன்றில் துணியைச் சுற்றிக் கொண்டு வலி தாங்க முடியாதவள் போல நடிக்கலானாள்.

ராஜன் உள்ளே நுழைந்ததும் சரிதா துடித்துக் கொண்டிருப்பது கண்டு பதறிப்போனான். அவன் அவளிடம் ''என்ன ஆகிவிட்டது? ஏன் இப்படித் தவிக்கிறாய்?'' என்று கேட்டான். சரிதாவும் ''என் விரலில் நகம் முளைத்து விட்டதே! என்ன செய்வேன்? வலியாய் வலிக்கிறதே'' என்றாள் கையை உதறியவாறே.

ராஜனும் ''அப்படியா! இப்போதே ஓடிப் போய் வைத்தியரை அழைத்து வருகிறேன்'' என்றான். சரிதாவோ 'வேண்டாம் இது வைத்தியத்தால் போகக் கூடிய நோயல்ல எங்கள் பக்கத்து வீட்டில் இந்த மாதிரி விரலில் நகம் முளைத்த போது அவர்கள் தனிக் குடித்தனம் போய்விட்டார்கள். வியாதி மறைந்து போய்விட்டது. அதனால் நாமும் இந்த வீட்டை விட்டுப் போய் தனிக் குடித்தனம் போய் விட்டால் கொஞ்ச நாட்களில் இந்த நோய் மறைந்துவிடும். அதனால் உங்கள் அப்பா அம்மாவிடம் சொல்லி நாளையே நாம் தனிக் குடித்தனம் போக ஏற்பாடு செய்ய வேண்டும்'' என்றாள்.

ராஜனும் அவ்வாறே செய்வதாகக் கூறினான். சற்று நேரத்தில் லட்சுமியும் கோவிந்தனும் வீட்டிற்கு வந்தார்கள். ராஜன் அவர்களிடம் ''நான் நாளையே தனிக் குடித்தனம் போக வேண்டும். அப்போது



தான் சரிதாவுக்கு வந்துள்ள நோய் போகும்'' என்றான். அவன் தாய் அவனிடம் ''அப்படி என்ன நோய் வந்திருக்கிறது?'' என்று கேட்கவே ராஜனும் ''அவள் விரலில் நகம் முளைத்து விட்டது. தனிக் குடித்த னம் போனால்தான் அந்த நோய் மறையும்'' என்றான்.

லட்சுமி தன் மருமகளை ஏற இறங்கப் பார்த்துவிட்டு அவள் தன் மகனுக்கு போதித்ததுதான் அது என்று புரிந்து கொண்டாள். எனவே தன் மருமகளுக்கு அவள் பாடம் புகட்ட நினைத்தாள். அத னால் அவள் ''அடடா! விரலில் நகம் முளைத்துவிட்டதா? இது பயங்கர நோய்தான். உடனே கவனித்துத்தான் ஆகவேண்டும்'' என்று சொல்லிவிட்டுத் தன் கண வன் காதில் ரகசியமாக ஏதோ கூறினாள். கோவிந்தனும் வெளியே சென்றான்.

லட்சுமி சரிதாவின் பக்கம் போய் ''உனக்கு வந்திருக்கும் நோய் மிக வும் பயங்கரமானதே. நாளையே நீயும் ராஜனும் தனிக் குடித்தனம் போக ஏற்பாடு செய்கிறேன்'' என் றாள். இதற்குள் கோவிந்தன் அவ் வூர் நாட்டு வைத்தியனை அழைத்து வந்தான். அவன் கையில் நல்ல பதனான கத்தி இருந்தது. அப்போது லட்சுமி தன் மகனிடம் ஏதோ ரகசியமாகக் கூறவே அவனும் சரி என்று தலையை ஆட்டினான். மறு நிமிடம் ராஜன் சரிதாவை கெட்டி யாகத் தன் இரு கைகளாலும் பிடித்துக் கொண்டான். லட்சுமி சரிதாவைப் பேச விடாமல் அவளது இருகைகளையும் சேர்த்துப் பிடித் துக் கொண்டான். நாட்டு வைத்தி யன் நஞ்சன் கத்தியைத் தீட்டிய வாறே ''அந்த விரலைக் காட்டுங் கள். சட்டென வெட்டிவிட்டு இன் னமும் இரண்டு மூன்று வீடுகளுக் குப் போக வேண்டும்'' என்றான்.

லட்சுமியும் ''நஞ்சா! அவசரத் தில் ஒரு விரலுக்கு இரண்டு விர லாக அந்த நாரராயணன் வீட்டில் அறுத்தது போல அறுத்துவிடாதே'' எனவே நஞ்சனும் ''பயப்படாதீர் கள். அப்படி நான் நான்கு வருடங் களுக்கு முன் தவறுதலாகச் செய்

தைத இப்போது ஏன் சுட்டிக் காட்டுகிறீர்கள்? இன்று சரியான விரலையே அறுப்பேன்'' என்றான்.

அதைக் கேட்ட சரிதா திடுக்கிட்டு தன் மாமியாரிடம் "அத்தை! என் விரலுக்கு ஒன்றும் இல்லை. தனிக்குடித்தனம் போக அவரிடம் வேடிக்கையாக ஏதோ சொன்னேன். இந்த நஞ்சனை அனுப்பி விடுங்கள்'' என்று கெஞ்சினாள். லட்சுமியும் தன் பிடியைத் தளர்த்தி சரிதாவை விட்டு விட்டாள். நஞ்சனும் தன் கத்தியை மடக்கி எடுத்து வைத்தான்.

இதைக் கண்ட ராஜன் "அப்படியானால் சரிதாவின் நகம் முளைத்த விரலை என்ன செய்வது?'' என்று கேட்டான். நஞ்சனும் "பிறக்கும் போதே விரலில் நகம் முளைத்து விடுகிறது. அது ஒன்றும் நோயல்ல'' என்றதும் சரிதா தலை குனிந்து கொண்டாள். லட்சுமியும் "சரிதா! நீ தனிக் குடித்தனம் போக விரும்புவதை எங்களிடம் கூறி இருந்தால் நானும் உன் மாமனாரும் இந்த வீட்டை விட்டுப் போய் நம் வயலில் ஒரு மூலையில் ஒரு குடிசை போட்டுக் கொண்டு இருப்போம். நீங்கள் இருவரும் இந்த வீட்டிலேயே இருக்கலாமே. தனியாக வேறு இடத்திற்குப் போக வேண்டியதில்லையே'' என்றாள்.

சரிதா தன் மாமியாரின் கால்களில் விழுந்து தன் அறியாமையை மன்னித்து விடுமாறு வேண்டினாள். லட்சுமியும் "மன்னித்தேன். ஆனால் ஒரு விஷயம்! உன் கணவனைத் திருத்தி எங்களை மகிழ்விக்க ஒரு பேரனை நீ பெற்று கொடுப்பது உன் பொறுப்பு'' என்றாள்.

பிறகு அவள் நஞ்சனுக்கு ஒரு ரூபாய் கொடுத்து அனுப்பவே போகும்போது அவனும் "அம்மா! மறுபடியும் இந்த மாதிரி விரலில் நகம் முளைத்தால் எனக்குச் சொல்லி அனுப்புங்கள். நான் வந்து விடுகிறேன்'' என்றான் சிரித்துக் கொண்டே.





# மூன்று கவிஞர்கள்

மதுரையில் ஒரு பேட்டையில் சந்திரன், சேகரன், சிவன் என்ற மூன்று கவிஞர்கள் இருந்தார்கள். அவர்கள் மூவரும் நண்பர்களே. சந்திரன் நாஸ்திகன். கோவில் என்றாலே வெறுப்பவன். சேகரனோ எதற்கும் கடவுளை நம்புபவன். சிவனோ வடிகட்டின கஞ்சன்.

இந்த மூன்று நண்பர்களையும் பரமன் என்பவன் தன் நண்பர்களாக்கிக் கொண்டான். பரமன் உலக விவகாரம் தெரிந்தவன். இந்த நால்வரும் தம் பேட்டையில் தினமும் மாலையில் ஓரிடத்தில் கூடி இலக்கிய விமர்சனத்தில் இறங்கி விடுவார்கள். இவர்களே கவிஞர்களானதால் தாம் புனைந்த கவிதைகளைக் கூறி மகிழ்ந்தும் வந்தார்கள். ஆக அவர்களது கவிதைகளை அவர்களைத் தவிர வேறு யாரும் அப்பேட்டையில் கேட்க முன் வரவில்லை.

அப்பேட்டையில் வாழ்பவர்கள் அந்தக் கவிஞர்களின் கவிதைகளைக் கிண்டல் செய்தும் வந்தனர்.

பரமன் பரந்த அனுபவம் பெற்றவன் அதனால் இந்த மூவரால் தனக்கு என்றாவது நன்மை ஏற்படும் என எண்ணி அவர்களுடன் பழகி வந்தான். அதனால் அவன் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுமையுடன் அந்தக் கவிஞர்களின் கவிதைகளைக் கேட்க வேண்டியதாயிற்று. அவர்கள் காற்று அவன் மீதும் பட்டு அவனும் கவிதை புனைய ஆரம்பித்து விட்டான்!

ஒருமுறை ஒரு பணக்காரர் சிறந்த கவிதைத் தொகுப்பிற்கு ஆயிரம் ரூபாய் பரிசளிப்பதாக அறிவித்தார். 'அவ்வளவுதான்! ஆயிரக்கனக்கான பேர்கள் தாம்

—உஷா வெங்கடராமன்—

கவிஞர்கள் எனக் கூறிக் கொண்டு தம்படைப்புகளை அனுப்பி வைத்தார்கள். நாட்டில் அவ்வளவு கவிஞர்கள் இருக்கிறார்களா என அவற்றைப் பரிசீலித்த நடுவர்களே எண்ணித் திகைத்துப் போனார்கள். முடிவில் அவர்கள் ஐந்து கவிஞர்களின் கவிதைத் தொகுப்புகளைச் சிறந்தவை எனக் கருதி அவற்றிற்குப் பரிசுகளை அளிக்குமாறு பரிந்துரை செய்தனர். பணக்காரரும் அந்த ஐந்து கவிஞர்களையும் ஒரு கூட்டத்தில் கௌரவித்து ஆயிரம் ரூபாய் வீதம் பரிசுகளை வழங்கினார். இவ்வாறு பாராட்டும் பரிசும் பெற்றவர்களில் பரமனும் ஒருவன்.

தம் மூவரில் யாருக்குமே பரிசு கிடைக்கவில்லையே என சந்திரனும், சேகரனும், சிவனும் மனம் புழுங்கினார்கள். அன்று முதல் அவர்கள் பரமனைக் கண்டாலே முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள். பரமனிடம் பேசுவதையும் அவர்கள் நிறுத்தி விட்டார்கள்.

நல்ல அனுபவஸ்தனான பரமனோ உலக இயல்பு இதுதான் எனப் புரிந்து கொள்பவன். அந்த மூவரின் மனதை மாற்ற எண்ணி தன் நண்பர்களிடம் உள்ள குறைகளைச் சுட்டிக்காட்டி அவற்றைப் போக்க இது ஒரு நல்ல வாய்ப்பு என அவன் கண்டான்.

முதலில் பரமன் சந்திரனைத் தனியாக சந்தித்தான். அவனிடம் "நீ உன் நாஸ்திக வாதத்தை விட்டு விடு. கடவுளை நம்பு. அவரது



அருள் கிடைத்தாலே நீ வாழ்க்கையில் முன்னேற முடியும்" என்றான். அதன் பிறகு அவன் சேகரனைக் கண்டு "நீ போட்டியில் வெற்றி பெற்றவர்களைத் கடவுளாகக் கருதி மதித்திருந்தால் உனக்கு அவரது அருள் கிட்டி இருக்கும். இனியாவது எல்லோரையும் கடவுளாக மதித்து கௌரவித்து வா" என்றான். முடிவில் சிவனைக் கண்டு" உன் கஞ்சத்தனத்தால் நீ உன்னையே தாழ்த்திக் கொண்டாய். நீ மட்டும் நடுவர்களை முன்கூட்டியே சந்தித்து பணம் கொடுத்து சரிப்படுத்தி இருந்தால் உனக்கும் பரிசும் பாராட்டுதல்களும் கிடைத்திருக்குமே. இப்படி வாழ்க்கையில் எப்போதோ வரும் அரிய வாய்ப்பை, பணம் போகிறதே என்று நினைத்து நழுவ விட்டால் அப்புறம் எப்படித்தான் முன்னேற முடியும்?" என்றான்.

இப்படி நடந்தபின் அந்த மூன்று நண்பர்களும் வருத்தப்படாமலும் சந்தோஷமாகவும் வாழ்நாட்களைக் கழிப்பதைக் கண்டு பரமன் மகிழ்ந்தான். ஆயினும் அவர்கள் தம் பழைய போக்கின் படித்தான் நடத்து வந்தார்கள். கொஞ்சமும் மாறிவிடவில்லை. அதனால் பரமன் அவர்களை மறுபடியும் தனித் தனியே சந்தித்தான்.

அம்மூவரும் உலக அனுபவம் பெற்றவர்களாய் எல்லோருடனும் சகஜமாய்ப் பழக வேண்டும் என்றும் பரமன் விரும்பினான். அப்படி நினைத்து அவன் சந்திரனைச் சந்தித்த போது, அவன் "இதோ பார், பரமா! உனக்கு பரிசு கிடைத்தது



நீ கடவுளின் பேரில் முழு நம்பிக்கை வைத்ததால்தான் என்பதைக் கண்டு மிகவும் மகிழ்கிறேன். மனிதர்களி டையே இவ்வளவு வேறுபாடு களைக் காணச் செய்யும் அந்தக் கடவுளின் உதவியோ அருளோ எனக்குக் கொஞ்சமும் தேவை இல்லை. நான் என் சுய முயற்சி யால்தான் பரிசை அடைய விரும்பு கிறேன்'' என்று பதில் கூறினான்.

அங்கிருந்து பரமன் சேகரனிடம் போய் பேசியபோது ''உன் கவி தைத் தொகுப்பைப் படித்துப் பார்த்தேன். இந்த மாதிரி மட்ட மான படைப்புகளைத் தருபவர் களையெல்லாம் நான் கடவுளாக மதிக்க வேண்டும் என்று நீ கூறு வதை நான் ஏற்க முடியாது. நான் மிக உயரிய படைப்பை சமர்பித் துத்தான் பரிசை அடைவேன்'' என்றான்.

அடுத்த பரமன் சிவனைச் சந் தித்த போது அவன் ''பரமா! உன் மாதிரிப் பணம் கொடுத்துப் பரிசு வாங்குபவர்களால்தான் மட்டரக மான இலக்கியங்கள் வெளிவந்து நல்லனவற்றை அமுக்கி விடுகின் றன. என் உயரிய படைப்பிற்கு ஏன் பரிசு கிடைக்கவில்லை என் பது நீ சொன்ன பிறகுதான் புரிந் தது. நான் அப்படிப்பட்ட குறுக்கு வழியில் எந்தப் பரிசையும் பெற விரும்பவில்லை'' என்றான்.

மூவரும் சற்றும் மாறாமல் பிறரது நல்ல படைப்புக்களைப் பாராட்ட மனம் இல்லாமல் இருப் பது கண்டு பரமன் தான் அவர் களோடு பழகியதற்காக வெட்கப் பட்டான். இப்படிப்பட்ட கிணற்றுத் தவளைகளோடு பழகாமல் இருப் பதே மேல் என எண்ணிப் பரமன் அவர்களோடு சேராமல் ஒதுங்கி விட்டான்.

ஆனால் அந்த மூவரும் சற்றுத் திருந்தாமல் தாம் பிடித்த முயலுக்கு மூன்றே கால் எனச் சாதிப்பவனைப் போல இருந்து முன்னேறாமலேயே போயினர்.






சீதை எங்கு இருக்கிறாள் என்பது தெரிந்ததும் இராமர் உடனேயே அங்கு போய் அவளைக் காண வேண்டும் என்று துடியாய்த் துடித்தார். அவள் பயங்கர அரக்கிகளுக்கு மத்தியில் சிறை வைக்கப்பட்டிருக்கிறாள் என்பதைக் கேட்டதும் பதறிப் போனார். சீதையிடம் அனுமார் பேசிவிட்டு வந்தார் என அறிந்ததும் அவர் சீதை என்னென்ன சொன்னாள் என்பதை முழுவதுமாகக் கேட்க விரும்பினார். அனுமாரும் சீதை கூறிய காகத்தின் கதையைக் குறிப்பிட்டார்.

"இந்தக் கதையைக் கூறி சீதாதேவி என்னிடம் இவ்வளவு சக்தி வாய்ந்த என் கணவர் என்னை விடுவிக்க இராட்சஸர்கள் மீதும் அம்புகளைப் பொழிவார். என்மீது அவர் அன்பு கொண்டிருந்தால் அவர் உடனேயே கிளம்பிவந்து இராவணனைக் கொல்ல வேண்டும் என்பதே என் விருப்பம். இதற்காக அவர் கூட வர வேண்டாம். இலட்சுமணனை அனுப்பினாலே போதுமே. இதுவரை அவர்கள் நான் சிறை வைக்கப்பட்டிருக்கும் இடம் பற்றி அறியாமல் போனதற்கு நான் செய்த பாவமே காரணமாக இருக்க வேண்டும் என்றார். நான் அவரிடம் நீங்களும் இலட்சுமணனும் அவர் நினைவாகவே இருப்பதாக கூறினேன். அவரது துயரம் விரைவிலேயே மறைந்து விடும் என ஆறுதலுக்குக் கூறினேன். அது கேட்டு ஒருவாறு மனம் தேறி அவர்

—வானர சேனைகள் கிளம்பின—



தலையில் அணிந்து கொள்ளும் சூடாமணியை எடுத்துக் கொடுத்தார். உங்கள் நலனைக் கோருவதாகவும் சொல்லச் சொன்னார். நீங்களும் இலட்சுமணனும் சுக்கிரீவனின் படைகளோடு வந்து விரைவிலேயே அவரை மீட்கப் போவதாகக் கூறிவிட்டு வந்தேன்."

இவ்வாறு அனுமார் கூறியதைக் கேட்ட இராமர் மிக்க மகிழ்ச்சி அடைந்தார். அவர் "அனுமானே! நீ செய்த பணி மகத்தானது. நூறு யோசனை இடைவெளியுள்ள கடலைத் தாண்டியது நீ செய்த அற்புதச் செயலே. இதை கருட தேவனாலும் வாயுதேவனாலும்தான் செய்ய முடியும். வேறு யாராலும் முடியாது இலங்கைக்குள் போய் விட்டு உயிருடன் திரும்புவது எளிதல்லவே. அங்கு அசோகவனத்தை அழித்து இராட்சஸர்களை ஒழித்து, இலங்கா புரியையே நீ எரித்தது சாமான்ய மான செயலா? நீ எங்கள் குலத்திற்கே மகத்தான சேவையைப் புரிந்திருக்கிறாய். நீ செய்த இந்த மகத்தான உதவிக்கு என்ன கைம்மாறு செய்வதோ?" எனக்கூறி அனுமாரைக் கட்டித் தழுவிக் கொண்டார்.

அதன் பிறகு சற்று யோசித்த இராமர் "மாபெரும் கடலைக் கடந்து எவ்வாறு இலங்கையை அடைய முடியும்?" என அனுமாரிடமே கேட்டார். அனுமார் சுக்கிரீவனைப் பார்க்கவே அவனும் "இது ஒரு பெரும் பிரச்னை இல்லை. நாம் இலங்கைக்குப் போகப் பாலம் கட்டுவோம். நம் படைகளோடு போய் இராவணனைக் கொன்று சீதாதேவியை மீட்டு வருவோம். எனவே அந்தப் பாலத்தை எப்படிக் கட்டுவது என்பது பற்றி யோசிப்போம். இன்னும் வேறு ஏதாவது வழியும் உள்ளதா என்றும் காண்போம்" என்றான்

இராமரும் "பாலம் கட்ட முடியாவிட்டால் சமுத்திரத்தையே வற்ற வைத்து நடந்து செல்லலாம். ஆனால் இலங்காபுரியின் அமைப்பு என்ன? கோட்டை எப்படி அமைந்துள்ளது? பாதுகாப்பு ஏற்பாடுகள் எவ்வாறு செய்யப்பட்டுள்ளன? காவல் வீரர்கள் எங்கெல்லாம்

நிறுத்தப்பட்டிருக்கிறார்கள்? இதையெல்லாம் இலங்காபுரியை நேரில் கண்டு வந்த அனுமான்தான் கூற வேண்டும்'' என்றார்.

அனுமாரும் ''இலங்காபுரி மிகவும் பரந்துள்ளது. அதில் ஆயிரக் கணக்கான ராட்சஸர்கள் சுகமாக வாழ்ந்து வருகிறார்கள். தேர்ப் படை, யானைப் படை, குதிரைப் படை என்பவை மிக அதிகமாக உள்ளன. இலங்காபுரியைச் சுற்றிக் கடுமையான காவல் உள்ளது. அதனை மீறி அந்நகருக்குள் போக முடியாது. தலைவாசல்களில் பல் வித யந்திரங்கள் உள்ளன. அம்பும் வில்லுமாக வீரர்கள் நிற்கிறார் கள். இந்தப் பாதுகாப்பு ஏற்பாட் டால் நகருக்குக் நுழைய முயலும் எதிரிகளை ஆயிரக்கணக்கில் கொன்று விடுவார்கள். நகரத்தில் பொன் மாளிகைகளும் கூடங்களும் உள்ளன. நவரத்தினங்கள் பதிக்கப் பட்ட வாசல்களும் சன்னல்களும் உள்ளன. நகரைச் சுற்றி ஆழமான அகழிகள் உள்ளன. அவற்றில் பயங் கரமான முதலைகள் இருக்கின்றன. நுழைவாசல்கள் தாமாக மேலேபோய் கீழே வந்து திறந்து மூடிக் கொள் ளும் விதத்தில் அமைந்துள்ளன. இராவணன் மிகுந்த எச்சரிக்கை யுடன் இருக்கிறான். போர் இல்லாத போதும் தன் படைகளை தயாராக வைத்திருக்கிறான். இலங்காபுரி திரிகூட மலைமீது அமைந்துள்ளது.



அதற்குப் போக வழி தெரியவேண் டும். மேலும் கட்டுக் காவல் பல மாக இருப்பதால் அந்நகரச் செய்தி கள் வெளியே தெரிவதில்லை. ஏக பாதுகாப்புடன் தான் இலங்கா புரி உள்ளது. நான் கட்டுப்பாடு களை எல்லாம் உடைத்துக் கொண்டு அந்நகருக்குள் சென்றேன். அந் நகரை எரித்தேன். பல அரக்கர் களை கொன்றேன். அதனால் இப் போது இலங்காபுரி முன்போல அவ்வளவு பலமுள்ளதாக இல்லை. கடலை எப்படியாவது கடந்து இலங்காபுரியை அடைந்து விட லாம். அதை வெல்ல நம் அங்கதன் மைந்தன், துவிதியன், ஜாம்பவான் நீலன் முதலிய மாபெரும் வீரர்கள் இருக்கிறார்கள். எனவே ஒரு நல்ல



வேண்டும். எதிரிகள் எங்கெல்லாம் பதுங்கி இருக்கிறார்கள் என்பதை வான வீதியில் பறந்து அறிந்து கொள்ள வேண்டும். அவர்களது பலத்தை அறிந்து அதற்குத் தக்கபடி படைவீரர்களை நிறுத்தி வைக்க வேண்டும்.

படைத் தலைவன் நீலன் சுக்கிரீவன் சொன்னதை எல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டு அதன் படி படைகளை நிறுத்தினான். இராமர் முன் நடந்து செல்ல அவர் பின்னால் வானரசேனை செல்லலாயிற்று.

மாபெரும் வீரனான கஜனும், பலசாலியான கவயனும், கவாட்சனும் படையின் முன் வரிசையில் இருந்தனர். திறமை மிக்க ரிஷபன் படையின் வலது பக்கத்தில் பாதுகாப்பிற்காகத் தலைமை தாங்கினான். அனுமார் இராமருக்கு உறுதுணையாகச் சென்று கொண்டிருந்தார். இலட்சுமணனின் பக்கம் அங்கதன் இருந்து வரலானான்.

இப்படியாக வானரசேனை தென் திசையில் செல்லலாயிற்று. வானரங்கள் குதித்துக் கொண்டும், உயர எம்பியும், கத்திக் கொண்டும், ஆடிப்பாடிக் கொண்டும், வழியில் கண்ட பழங்களைப் பறித்தச் சாப்பிட்டுக் கொண்டும் சென்றன.

வானரசேனை ஒரு மாபெரும் கடல் போல இருந்தது. அது மலைகளையும் ஆறுகளையும் ஏரிகளை

முகூர்த்தமாகப் பார்த்து எல்லோரும் கிளம்பலாம்" என்றார்.

அதைக் கேட்ட இராமரும் "அனுமான் சொல்வது மிகவும் சரி. நாம் இப்போதே கிளம்பலாம். இப்போது நல்ல முகூர்த்த வேளைதான். சுக்கிரீவா! பயணத்திற்கான ஏற்பாடுகளை எல்லாம் செய்" என்றார்.

சுக்கிரீவனும் படைகள் எப்படி செல்ல வேண்டும் என்று விவரமாகக் கூறினான். நம் படைகளை உணவுப் பொருள்கள் தாராளமாகக் கிடைக்கும் பகுதிகள் வழியாக நடத்திச் செல்ல வேண்டும் ஒற்றர்கள் முன்னதாக அனுப்பிப் படைகளை செல்லும் வழியில் எதிரிகளால் எவ்வித ஆபத்தும் நேராது என்பதை உறுதி செய்து கொள்ள

யும், பள்ளத்தாக்குகளையும், காடு களையும் கடந்து பழங்களைத் தின்றும் தேனைக் குடித்தும் சென்றவாறே முடிவில் மகேந்திர மலையை அடைந்தது.

இராமர் அந்த மலையின் உச்சியில் நின்று சுற்றிலும் பார்த்தார். பிறகு அவர் இலட்சுமணனையும் சுக்கிரீவனையும் அழைத்துக் கொண்டு வானரங்கள் முகாமிட்டிருந்த கடற்கரைப் பகுதியை அடைந்தார். அவர் சுக்கிரீவனிடம் "நாம் இங்கேயே தங்குவோம். இந்தக் கடலைக் கடக்க என்ன வழி என்று யோசிப்போம். இதற்குச் சிறிது காலம் பிடிக்கும். யாரும் இங்கிருந்து போய்விடாமல் பார்த்துக் கொள். எதிரிகள் ஒருவேளை தாக்க வருவார்களானால் அத்தாக்குதலை எதிர்த்து முறியடிக்கவும் படையைத் தயார் நிலையில் வைத்திரு" என்றார்.

வானரப் படைகள் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன. அவை அலை பாய்ந்து கொந்தளிக்கும் சமுத்திரத்தையும் அதில் வாழும் பயங்கரப் பிராணிகளையும் நினைத்து அவற்றால் வரக் கூடிய ஆபத்துகளையும் எண்ணிப் பார்த்தன. அந்தக் கடலை எப்படித்தான் கடக்கப் போகிறோமோ என நினைத்து மலைத்துப் போயின.

இலங்காபுரியில் இராவணன் தன் தர்பாரைக் கூட்டி "ஆ! நமக்



குப் பெருத்த அவமானம் ஏற்பட்டு விட்டது. யாருமே நுழைய முடியாத நம் கோட்டைக்குள் காவல் கட்டுப்பாடுகளை மீறி ஒரு குரங்கு நுழைந்து விட்டது. அது நான் சிறை வைத்திருந்த சீதையைக் கண்டு பேசிவிட்டுப் போயிருக்கிறது. நம் ஊரின் பல மாளிகைகளை எரித்தும், வீரர்களைக் கொன்றும் நம்மைத் தலை குனிய வைத்து விட்டது. இனிமேல் நாம் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். நம்மைத் தாக்க யாராவது வந்தாலும் வரலாம்" என்றான்.

ஒற்றர்கள் வாயிலாக வானரப் படை வந்து கொண்டிருப்பதை அறிந்ததாலே இராவணன் இவ்வாறு கூறினான். அவன் மனதில்



அந்தப் படை எப்படியாவது கடலைக் கடந்து இலங்கையை அடைந்து விடும் என்ற கவலை ஏற்பட்டு விட்டது. எனவே போர் நடக்கப் போவது உறுதி என்றும் அதில் எதிரியைத் தோற்கடித்து வெற்றி பெற என்ன வழி என்று யோசிக்க லானான்.

இராவணன் கவலைப்படுவதைக் கண்டு ராட்சஸர்கள் ஆச்சரியப் பட்டார்கள். சப்தலோகங்களை யும் வென்ற இராவணன் கேவலம் குரங்குகளின் கூட்டம் கண்டு ஏன் பயப்பட வேண்டும் என்று நினைத் தார்கள். எனவே அவனுக்கு உற் சாக மூட்டும் வகையில் பேச எண்ணினார்கள்.

அப்போது சிலர் "இது பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? நமக்கு இருக்கும் பலம் வேறு யாருக்கு உள்ளது? நம்படை எவ்வளவு பெரி யது! நம்மிடம் உள்ள ஆயுதங்களைப் போல வேறு யாரிடம் உள்ளன? அதனால் தாங்கள் கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம்" என்றார் கள்.

வேறு சிலரோ இராவணன் கடந்த காலத்தில் அடைந்த மாபெ ரும் வெற்றிகளை நினைவுபடுத்தி னார்கள். குபேரனை வென்றதைக் கூறினார்கள். கைலயங்கிரியைத் தூக்கி சிவபிரானை மகிழ்வித்ததை எடுத்துரைத்தார்கள். பூவுலகின் எல்லா மன்னர்களும் அவனுக்கு அடிபணிந்து நிற்பதை எடுத்துக் காட்டினார்கள். இப்படி எல்லாம் வெற்றி மேல் வெற்றி பெற்ற அவன் இராமரின் வானரப்படை கள் பற்றி பயப்படவே வேண்டாம் என்றும் அவர்களை அடக்க இந்திர ஜித் ஒருவனே போதும் என்றும் சொன்னார்கள்.

பிரகஸ்தன் என்பவனோ "இரா வணேஸ்வரா! தங்களுக்கு முன் தேவர்களோ அரக்கர்களோ, கந்தர் வர்களோ, நிற்கவும் முடியாது. அதனால் இந்தக் குரங்குகள் எந்த மூலைக்கு? நாம் சற்று அயர்ந்து விட்ட சமயத்தில் அந்த அனுமான் வந்து என்னென்னவோ செய்து விட்டு ஓடிவிட்டான். அவன் உயிர் தப்பியது அவனது அதிர்ஷ்டவசத்

தால்தான். எனக்கு உத்திரவு கொடுங்கள். இந்தப் பூவுலகில் உள்ள வானரங்களை எல்லாம் அழித்துவிட்டு வருகிறேன்" என்றான் ஆவேசத்தோடு.

துன்முகன் என்பவனும் தானும் பிரகஸ்தன் கூறியது போலவே செய்வதோடு அந்த அனுமானைப் பிடித்துச் சித்திரவதை செய்வதாகக் கருவினான். வச்சிரதமிட்டிரன் என்பவன் வானரங்களைக் கொல்வதோடு இராமர், இலட்சுமணன், சுக்கிரீவன் அனுமான் ஆகியோரைக் கொன்றுவிடுவதாகக் கொக்கரித்தான்.

அவன் மேலும் "நாமோ விரும்பிய உருவத்தை அடைபவர்கள் எனவே மனிதர்களைப் போல மாறி இராமரிடம் போவோம் நம்மை பரதன் அனுப்பியதாயும் பரதன் பெரும் படையுடன் வந்து கொண்டிருப்பதாகவும் கூறி நம்ப வைப்போம். அதே சமயம் நம்மவர்கள் வானத்திலிருந்து வானரப் படைகளின் மீது கற்களை வீசிக் கொல்லட்டும். உருமாறிச் சென்ற ராட்சஸர்களும் வானரங்களைத் தாக்கி அழித்து விடலாம். அப்புறம் இராமனும் இலட்சுமணனும் தற்காலை செய்து கொண்டு இறந்து விடுவார்கள். எப்படி என் யோசனை?" என்று கேட்டான்.

நிகும்பன் என்பவனோ "இதெல்லாம் எதற்கு? நான் ஒருவனே போய் எல்லோரையும் கொன்று விட்டு வருகிறேன்" என்றான். வச்சிரஹனன் என்பவனோ வானரர்களை எல்லீாம் கட்டி இழுத்து வருவதாகக் கூறினான். இப்படியாக ராட்சஸர்கள் எல்லோரும் தமது ஆயுதங்களை எடுத்துக் கொண்டு போருக்குத் தயார் என அறிவித்தார்கள்.

அவர்கள் கூறியதை எல்லாம் இராவணன் கேட்டான். ஆனாலும் அவன் மனம் நிம்மதி அடையவில்லை. ஏனோ ஒருவிதக் கவலை அவன் மனதில் குடிகொண்டது.





# வாய்ப்பை இழந்தாய்?

ஆப்பிரிக்கக் கண்டத்து ஒரு காட்டில் இரு பிரிவுகள் இருந்தன. ஒரு கூட்டத்தின் தலைவன் உலுகா. மற்ற கூட்டத்தின் தலைவன் ஒகாயா. இந்த இரு கூட்டத்தினரிடையே கடும்பகை நிலவியது. உலுகாவின் கூட்டத்தில் ஆட்கள் குறைவாக இருந்த போதிலும்கூட ஒகாயாவின் கூட்டத்தை விடச் சக்தி வாய்ந்ததாக இருந்தது. உலுகாவின் கை ஓங்கி இருந்தது.

இதற்குக் காரணம் உலுகா தயாரித்து வந்த ஒரு வகை வலி நிவாரண மைதான். அவன் அதனை எடுத்து காயங்களின் மீது தடவினால் நொடியில் காயம் ஆறி விடும். அந்த மையை மூக்கினருகே வைத்து நுகரச் செய்தால் இறந்தவன் கூடப் பிழைத்து எழுந்து விடுவான். அதனால் உலுகாவின் கூட்டத்தினர் பயமில்லாமல் எதிரிகளைத் தாக்கி அவர்களைக் கொன்று வந்தார்கள்.

ஒகாயாவிடம் நிறைய ஆட்கள் இருந்த போதிலும் எதிரிகளின் தாக்குதல்களில் அவர்கள் காய முற்று இறக்கலானார்கள். ஒகாயாவிடம் உலுகாவிடம் உள்ள சக்தி வாய்ந்த மை இல்லை. அதனால் அவன் என்ன செய்வது என்று திகைக்கலானான்.

உலுகா தனக்குப் பிறகு அந்த மை தயாரிக்கும் முறை அழிந்து விடக் கூடாதே என நினைத்து அந்த ரகசிய முறையைத் தன் மகனுக்குக் கற்பித்துக் கொடுத்தான். அந்த ரகசிய முறை இப்போது உலுகாவிற்கும் அவனது மகனுக்கும் மட்டுமே தெரிந்திருந்தது. வேறு யாருக்கும் தெரியாது.

உலுகாவை எப்படி அடக்குவது என்று யோசித்த ஒகாயாவுக்கு

—ஆப்பிரிக்கப் பழங்கதை—



ஒரு யோசனை தோன்றியது. அதன் படி உலுகாவும் அவன் மகனும் காட்டில் திரிந்து கொண்டிருக்கை யில் ஒகாயா தன் ஆட்களுடன் போய் அவர்கள் இருவரையும் சூழ்ந்து கொண்டு சிறைப்பிடித்து விட்டான்.

அவர்களை அவன் ஒரு அறை யில் அடைத்து "உலுகா! உனக் கும் உன் மகனுக்கும் ரகசிய மை தயாரிக்கும் முறை தெரியும். அதை எனக்குச் சொல்லும் வரை உங் களை விடப் போவதில்லை. எப் படியும் அதனை நான் தெரிந்து கொண்டாக வேண்டும். உம். சொல்" என்றான்.

உலூகாவோ "நீ என்னவேண்டு மானாலும் செய். ஆனால் நான் உனக்கு அதை மட்டும் சொல் லவே மாட்டேன்" என்றான். ஒகாயாவோ "ஓகோ அப்படியா? உன்னிடமிருந்து எப்படித் தெரிந்து கொள்ள வேண்டுமோ அப்படித் தெரிந்து கொள்கிறேன்" என்றான்.

ஒகாயா அவர்களைப் படாத பாடுபடுத்திச் சித்திரவதை செய் தும் இருவரும் அந்த ரகசியத்தைக் கூறவில்லை. அதனால் ஒகாயா "உங்களைக் கொன்றுவிடப் போகி றேன். எனக்கு அந்த இரகசிய முறையைச் சொல்லப் போகிறீர் களா, இல்லையா?" என்று மிரட்டி னான்.

அதைக் கேட்ட உலுகாவின் மகன் பயந்து விட்டான். அவன் உடல் நடுங்கியது உயிர் போய் விடுமோ என்று அஞ்சினான். இதனை உலுகா கவனித்து விட் டான். எங்கே தன் மகன் அந்த ரகசியத்தைக் கூறி விடு வானோ என்ற சந்தேகம் அவன் மனதில் எழுந்தது.

அவன் உடனே ஒகாயாவிடம் "உன்னிடம் ஒரு நிமிடம் தனியா கப் பேச வேண்டும்" என்றான். ஒகாயாவும் அவனைச் சற்று தூரத் திற்கு அழைத்துச் சென்றான். உலுகா அவனிடம் "இந்த ரகசி யத்தை நான் கூறுவதானால் என் கூட்டத்தவர்க்கு மட்டுமே கூற வேண்டும் என்று சத்தியம் செய் திருக்கிறேன். இப்போது நான் அதை உன்னிடம் சொன்னால் என்

மகன் நான் சத்தியத்தை மீறியதை அவர்களிடம் கூறி விடுவான். அதனால் என் உயிர் போய்விடும். அதனால் நீ என் மகனைக் கொன்று விடு. அப்போது யாரும் நான் தான் இந்த ரகசியத்தைக் கூறினேன் என்று என் கூட்டத்தினரிடம் சொல்ல முடியாது. நான் உனக்கு அந்த ரகசியத்தைக் கூறுகிறேன். முதலில் என் மகனைக் கொன்றுவிடு'' என்றான்.

ஒகாயாவும் அதற்கு இணங்கி உலுகாவின் மகனைக் கொன்று விட்டான். பிறகு உலுகாவிடம் "இப்போது சொல் அந்த ரகசியத்தை'' என்றான். உலுகாவோ "முடியாது. நான் சொல்ல மாட்டேன். இப்போது அந்த ரகசியத்தை அறிந்தவன் நான் ஒருவனே. அது என் கூட்டதவருக்குப் பாதகமாகப் பயன்படக்கூடாது'' என்றான்.

அதைக் கேட்ட ஒகாயா "அப்படியானால் உன் மகனை ஏன் கொல்லச் சொன்னாய்?'' என்று கேட்டான். உலுகாவும் "நீ அந்த ரகசியத்தை அறியும் வாய்ப்பை இழக்கச் செய்வதற்குத்தான். அவன் மிரட்டலால் தன் உயிர் போய் விடுமே என்று பயந்து விட்டான். அதனால் அந்த ரகசியத்தை அவன் உனக்குச் சொல்லிவிடப் போகிறானே என்று சந்தேகப்பட்டு அவனைக் கொல்லச் சொன்னேன். நான் என் உயிர் போவதைப் பற்றிக் கவலைப்படவில்லை. என் கூட்டத்தவர் அழிய நான் இணங்க மாட்டேன். நான் ஒரு வேளை இந்த ரகசியத்தை உனக்குக் கூறினாலும் என்னைக் கொல்லத்தான் போகிறாய். என் உயிர் இப்போதே போகட்டும் உனக்கு அந்த ரகசியமும் தெரியாமல் போகட்டும்'' என்றான்.

ஒகாயா அதைக் கேட்டுத் திகைத்து நின்றான். அப்போது உலுகா தான் நின்ற மலை மீதிருந்து ஆழமான பள்ளத்தில் சட்டெனக் குதித்து உயிர் நீத்தான்.





# அதோ திருடன்!

மன்னன் மகேந்திரன் ஒரு அழகிய பூங்காவைத் தன் அரண்மனை வளாகத்தில் அமைத்தான். அதன் நடுவே அழகிய குளத்தை வெட்டி அதைச் சுற்றிலும் மரங்களை வளர்த்து வந்தான். ஒருநாள் ராணி அந்தக் குளத்தில் குளிக்கச் சென்றாள். அவளோடு அவளது பணிப் பெண்ணும் சென்றாள்.

ராணி தன் நகைகளை எல்லாம் கழற்றி பணிப் பெண்ணிடம் கொடுத்து விட்டு குளத்தில் குளித்துக் கொண்டிருந்தாள். பணிப் பெண்ணும் அந்த நகைகளை ஒரு துணியில் சுற்றிக் குளக்கரையில் வைத்து விட்டு குளக்கரையிலிருந்த மலர்ச்செடிகளிலிருந்து மலர்களைக் கொய்யலானாள்.

அப்போது குளக்கரையிலிருந்த ஒரு மரத்தின் மீது வாழ்ந்து வந்த ஒரு பெண் குரங்கு கீழே இறங்கி வந்தது. அது நகை மூட்டையிலிருந்து ஒரு வைர மாலையை எடுத்து அணிந்து கொண்டு மரத்தின் மீது ஏறிப் போய் விட்டது. இதைக் கண்ட பணிப் பெண் பயந்து போய் விட்டாள். விலையுயர்ந்த வைர மாலை போனது தன் அஜாக்கிரதையால்தான் என உணர்ந்த அவள் தனக்குக் கிடைக்குப் போகும் தண்டனை குறித்து எண்ணி நடுநடுங்கினாள்.

ராணி குளித்து விட்டுக் கரை ஏறித் தன் ஆடைகளையும் நகைகளையும் அணிந்து கொண்டாள். அப்போது வைரமாலை இல்லாதது கண்டு அவள் தன் பணிப் பெண்ணிடம் அது பற்றிக் கேட்டாள். பணிப் பெண்ணோ "தாங்கள் கொடுத்த நகைகளை அப்படியேதான் வைத்திருந்து கொடுத்தேன். எனக்கு அது பற்றி எதுவும்

—எஸ். சங்கரராம்—

தெரியாது'' என்று ஒரேயடியாகச் சாதித்தாள். பணிப் பெண்ணைச் சோதனை போட்டும் அந்த மாலை அவளிடம் இல்லாதது கண்டு ராணி மன்னனிடம் தன் வைர மாலை காணாது போனதைக் கூறினாள்.

மன்னனும் தன் மந்திரியை அழைத்து மறுநாள் காலையாவதற்கு முன் திருட்டுப் போன ராணியின் வைர மாலையையும் அதைத் திருடியவனையும் தன் முன் கொண்டு வந்து நிறுத்த வேண்டும் என்று கட்டளை இட்டான். மந்திரி காவல் தலைவனிடம் ''ராணியின் வைர மாலையைத் திருடியவனை நீ நாளைக் காலைக்குள் கண்டுபிடித்துக் கொண்டு வராவிட்டால் உன் வேலை போய்விடும்'' என்றான்.

காவலதிகாரி தன் ஆட்களுடன் பல போக்கிரிகளின் வீடுகளில் சோதனை செய்து பார்த்தான். எங்கும் அந்த மாலை கிடைக்கவில்லை. யாரையாவது திருடன் எனப் பிடித்து மன்னன் முன் நிறுத்துவது என நினைத்து அவன் கிழிந்த ஆடைகளுடன் தாடியும் மீசையும் ஒட்டிய கன்னங்களுடன் இருந்த ஒரு அப்பாவி மனிதனைப் பிடித்தான். காவலதிகாரி அவனை மன்னன் முன் கொண்டுபோய் நிறுத்தி ''இவன்தான் வைரமாலையைத் திருடிய திருடன்'' என்றான்.

மன்னனும் அவனை மிரட்டி ''வைர மாலையை எங்கே ஒளித்து



வைத்திருக்கிறாய்'' என்று கேட்டான். அந்த அப்பாவி மன்னன் தன்னை தண்டிப்பது உறுதி எனக் கண்டு ஒரு நிமிடம் யோசித்து ''அந்த மாலையை தங்களது பொக்கிஷதாரரிடம் கொடுத்து விட்டேன்'' என்றான். மன்னன் பொக்கிஷதாரனை இழுத்து வரும்படிக் கூறினான். காவல் வீரர்கள் அவனை இழுத்து வரவே அவன் தான் தப்பிக்க நினைத்து அந்த மாலையை ஆஸ்தான சோதிடரிடம் கொடுத்து விட்டதாகக் கூறினான்.

மன்னன் ஆஸ்தான சோதிடரை வரவழைத்து மாலை பற்றிக் கேட்கவே அவரும் ''நான் அதை மந்திரியின் மூத்த மகனிடம் கொடுத்து விட்டேன்'' என்றார். இந்த விசா



ரணை நடந்த போது மாலைப் பொழுது கழிந்து இருட்டியும் விட்டது.

அப்போது மன்னன் "இது பற்றி நாளைக் காலையில் மேலும் விசாரணை செய்கிறேன். அதுவரை நீங்களெல்லாம் சிறையில் இருங்கள்" எனக்கூறி அவர்களைச் சிறைச் சாலைக்கு அனுப்பி விட்டான். மந்திரியோ "இதென்ன! என் மகனைத் திருடன் என சோதிடர் கூறுகிறாரே. திருடன் எனப் பிடி பட்டவனிலிருந்து சோதிடர் வரை தான் திருடனல்ல எனக் கூறி மற்ற வன் மீது பழியைப் போடுகிறார் களே! இதில் ஏதோ மர்மம் உள் ளது. அதைக் கண்டுபிடிக்கிறேன்" என நினைத்துச் சிறைச்சாலைக் குச் சென்றார்.

சிறைச்சாலையில் அப்பாவியும் பொக்கிஷதாரனும், சோதிடரும் அடைக்கப்பட்ட அறையின் வெளியே மந்திரி மறைந்து நின்று அவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்று கேட்கலானார். அப்பாவி பொக்கிஷதாரரிடம் "என்னை மன்னித்து விடுங்கள். வைர மாலையை நான் திருடவில்லை. ஆனால் எனக்கு தண்டனை கிடைக் குமே என்று பயந்துதான் நான் தப்ப பழியை உங்கள் மீது போட் டேன்" என்றான்.

பொக்கிஷதாரனும் "என்னிட மும் அந்த மாலை இல்லை. ஆனால் நான் தப்ப சோதிடர் மீது பழியைப் போட்டேன்" என்றான். சோதிட ரும் "ஆமாம். நான் தப்ப மந்திரி மகன் மீது போட்டேன்" என்றார். இதையெல்லாம் கேட்ட மந்திரி அப்போதே போய் மன்னனைக் கண்டு அவர்கள் மூவரும் பேசிய தைக் கூறி "உண்மை என்ன என்று அறிய நாம் ராணியாரின் பணிப் பெண்ணை மிரட்டி விசாரித்தால் தெரிந்து விடும்" என்றார்.

மன்னன் அது கேட்டுப் பெரு மூச்சு விட்டு "அடடா! இதுவா விஷயம்? நாளைக் காலை அந்தப் பணிப் பெண்ணை விசாரிக்கலாம்" என்றான். காலைவரை அவனுக்குத் தூக்கமே வரவில்லை. விடிந்ததும் அந்தப் பணிப் பெண்ணை வர

வழைத்து "உண்மையைச் சொல். ராணியின் வைரமாலை எங்கே போயிற்று? நீ மட்டும் சொல்லா விட்டால் உன்னைச் சித்திரவதை செய்து உண்மையைக் கக்க வைப் பேன்" என்று மிரட்டினான்.

பணிப் பெண் பயந்து போய் விட்டாள். அவள் "அரசே! நானும் அதை எடுக்கவில்லை. குளக்கரை யில் ஒரு மரத்தில் வசிக்கும் ஒரு பெண் குரங்குதான் அந்த மாலையை எடுத்துப் போயிற்று. இது என் அஜாக்கிரதையால் நேர்ந்து விட் டது. எங்கே என் வேலை போய் விடுமோ எனப் பயந்தே நான் இதைக் கூறவில்லை" என்றார்.

மன்னனும் "அந்தப் பெண் குரங்கா எடுத்துப் போயிற்று?" என்று கேட்கவே அவளும் "ஆமாம். அது அந்த மாலையை எடுத்துத் தன் கழுத்தில் போட்டுக் கொண்டு ராணி நடப்பது போல் மிடுக்காக நடந்து போய் மரத்தின் மீது ஏறி யது. அதற்கு ராணி போல இருக்க வேண்டும் என்ற ஆசை வந்து விட்ட தாகத் தெரிகிறது" என்றாள்.

அதைக் கேட்ட மன்னன் "அப் படியானால் அந்த வைரமாலை அந்தப் பெண் குரங்கிடம் இன்ன மும் இருக்கும் என்றா நீ நினைக்கி றாய்?" என்று கேட்க, பணிப் பெண்ணும் "ஆமாம். அது எங்கும் போய் விடாது. அது அந்த மரத் தில் வசிக்கும் குரங்கே. அது அந்த மாலையை அந்த மரத்தின் பொந் தில் மறைத்து வைத்திருக்கும். யாராவது போனால் தன்னை அது அழகு படுத்திக்கொள்ள அதனை



எடுத்துப் போட்டுக் கொள்ளும். பெண்களுக்கு தாம் வைத்துள்ள நகைகளைப் போட்டுக் கொண்டு பிறர் முன் பகட்டாகத் தோன்ற முயல்வது இயல்புதானே!'' என்றாள்.

மன்னனும் சற்று யோசித்து ''சரி, நீ சொல்வது உண்மை என வைத்துக் கொண்டாலும் அந்தப் பெண் குரங்கை எப்படி மாலையை எடுக்கச் செய்வது? அதை எங்கே ஒளித்து வைத்திருக்கிறதோ?'' என்றான். பணிப் பெண்ணும் ''அதற்கு ஒரு வழி எனக்குத் தோன்றுகிறது. நம் அரண்மனையில் வளர்க்கும் ஒரு ஆண் குரங்கைக் கொண்டு போய் அந்த மரத்தின் மீது ஏற்றி விட்டால் போதும். உடனே அந்தப் பெண் குரங்கு வைரமாலையை எடுத்து அணிந்து கொண்டு வந்து ஆண் குரங்கின் முன் நிற்கும். அப்போது அந்தப் பெண் குரங்கைப் பிடித்து நம் வைரமாலையை எடுத்துக் கொண்டு விடலாம்'' என்றாள்.

மன்னனும் சில ஆட்களோடும் அரண்மனையில் வளர்க்கப்பட்ட ஒரு ஆண் குரங்கோடும் குளக்கரைக்குச் சென்றான். பணிப் பெண் காட்டிய மரத்தின் மீது ஆண் குரங்கை ஆட்கள் ஏற்றி விட்டார்கள். ஒரு ஆண் குரங்கு வருவதைக் கண்டு அந்த மரத்தில் வாழ்ந்து வந்த அந்தப் பெண் குரங்கு உடனே ஒரு பொந்திலிருந்து வைர மாலையை எடுத்துத் தன் கழுத்தில் அணிந்து கொண்டு மிடுக்காக ஆண் குரங்கின் அருகில் போய் நின்றது. மன்னனின் ஆட்கள் சட்டென அந்தப் பெண் குரங்கைப் பிடித்துக் கொண்டார்கள். அதன் கழுத்திலிருந்த வைர மாலையை கழற்றி எடுத்துக் கொண்டு அந்தப் பெண் குரங்கைத் துரத்தி விட்டார்கள்.

மன்னன் பணிப் பெண் வைர மாலையைப் பெறக் கூறிய உபாயத்தை மெச்சி அவளுக்குப் பரிசளித்தான்.





# யார் மகள்?

சந்திரபுர ஆஸ்தான சோதிடர் ஆனந்த சர்மா. ஒருநாள் அவர் ஆற்றில் குளித்து விட்டுக் கரை ஏறி வந்த போது ஒரு இளைஞன் ஒரு மரத்தில் கயிற்றைக் கட்டி அதில் தொங்கித் தற்கொலை செய்து கொள்ளப் போவதைப் பார்த்தார். உடனே அவர் ஓடிப் போய் அவனைப் பிடித்து இறக்கி "என்னப்பா இது? பார்த்தால் இருபது வயது இளைஞனாக இருக்கிறாய். உனக்கு என்ன அப்படிக் கஷ்டம் வந்தது தற்கொலை செய்து கொள்ளும் அளவிற்கு? உன் வீட்டில் எதற்காகவாவது உன்னைக் கோபித்துக் கொண்டார்களா? ஏதாவது பணக் கஷ்டமா? அல்லது நீ விரும்பிய பெண்ணை கல்யாணம் செய்து கொள்ள முடியவில்லையா? சொல். நான் உனக்கு உதவுகிறேன்" என்றார்.

அந்த இளைஞனும் "உங்களால் என் விருப்பத்தை நிறைவேற்ற முடியுமா? நீங்கள் சற்று முன் கேட்டது போல நான் விரும்பும் பெண்ணை மணக்க முடியவில்லையே: அதனால் மனம் உடைந்து போய் விட்டது" என்றான். அதைக் கேட்ட ஆனந்த சர்மா "கவலைப் படாதே. நீ மணக்க விரும்பும் பெண்ணைப் பற்றி விவரம் சொல். முதலில் உன் கையைக் காட்டு நான் ஒரு சோதிடனே" என்றார். இளைஞனும் தன் கையைக் காட்டினான்.

சர்மாவும் அவனது கைரேகைகளைப் பார்த்துவிட்டு "உனக்குக் கல்யாணம் நடக்கத்தான் போகிறது. நீ அமோகமாக வாழப்போகிறாய்" என்றார். அதுகேட்டு அந்த இளைஞன் "அது எப்படி முடியும்? நான் விரும்பும் பெண்ணை மணக்

—எஸ். சோபினி—

கப் பல விஷயங்கள் இடைஞ்சல் களாக இருக்கின்றனவே" என்றான்.

சோதிடரும் "உலகில் முடியா தது என்று எதுவுமே இல்லை. நீ அந்தப் பெண்ணை மணப்பதற்கு என்னென்ன தடைகள் என்று சொல்" என்று கேட்டார். இளை ஞனும் "நான் விரும்பும் பெண் அந்தணர் குலத்தைச் சேர்ந்தவள். நானோ க்ஷத்திரியன் அவளோ பணக்காரக் குடும்பத்தில் பிறந்த வள். நானோ ஏழை. அவள் தந்தையோ அரசாங்கத்தில் உயர் பதவியில் இருப்பவர் எனக்கு எந்த அந்தஸ்தும் இல்லை. இப்படி எல்லாம் இருக்கையில் நான் விரும்பிய பெண்ணை நான் கல்யாணம் செய்து கொள்ள முடி யுமா?" என்று கேட்டான்.

ஆனந்த சர்மாவும் "இதோ பார். நான் சாமன்னியப்பட்டவன் இல்லை. ஆஸ்தான சோதிடர். நான் சொன்னது அப்படியே பலிக் கும். உன் ஜாதகப்படி நீ விரும் பிய பெண்ணைத்தான் மணக்கப் போகிறாய். விதி என்று ஒன்று இருக்கிறதே. அது சாதி பேதம் பாராது. ஏழைப் பணக்காரன் என்று எண்ணி விடாது. அந்தஸ்து என்பதை அலட்சியம் செய்து விடும் அதனால் நீ கொஞ்சமும் கவலைப்படாதே அது சரி, அந் தப் பெண் யார் என்று கூறவில் லையே" என்று கேட்டார்.

இளைஞனும் "'அவள் வேறு யாரும் இல்லை. தங்களது இரண்டா வது மகள்தான். அவளும் என்னையே மணக்க விரும்புகிறாள்" என்றான். சோதிடர் ஒரு நிமிடம் மலைத்துப் போனார். பிறகு அவர் "நீ மிகவும் கெட்டிக்காரன். என் வாயிலிருந்தே வ்ார்த்தைகளை வரவழைத்து விதி யின் செயல் எது எனக் காட்டிவிட் டாய். இவ்வளவு கெட்டிக்கார னாக உள்ள உன்னை என் மாப் பிள்ளையாக்கிக் கொள்ள எனக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை" என்றார் சிரித்துக்கொண்டே.






## அழிந்து வரும் நயாகரா

அமெரிக்காவில் ஒரு முனையையும் 'கனடாவில் மறு முனையையும் கொண்டுள்ள நயாகரா நீர் வீழ்ச்சி யாவரையும் மலைக்கச் செய்யும் மிக அகண்டதாம். இந்த நீர் வீழ்ச்சி கொஞ்சம் கொஞ்சமாக மாறிக் கொண்டே போய் 29,000 ஆண்டுகளுக்குப் பின் சாதாரண நதியாக ஆகிவிடும் எனப்புவிஇயல் வல்லுநர்கள் கருதுகிறார்கள். இந்த நீர்வீழ்ச்சியின் வேகமான நீரோட்டத்தால் அதன் அடியில் உள்ள கற்கள் கரைந்து கொண்டே போய் பின்னர் சாதாரண நதியாகி விடுமாம்.




## பெங்குவின் பறவைகள்

அண்டார்டிகா என்றதும் குட்டைக்கால்கள் கொண்டு குள்ளவாத்து போல நடக்கும் பெங்குவின் பறவைகளே நம் நினைவிற்கு வரும். இவற்றில் பதினேழு ரகங்கள் உள்ளனவாம். தென்துருவப் பனிக்கண்டத்தில் காணக் கிடைக்கும் இப்பறவை இனத்தை வடதுருவப் பனிப் பகுதியில் ஒன்று கூட இல்லை என்பது ஆச்சரியம் தானே




## குடிக்கும் ஆனால் உண்ணாது

பட்டுப்புழு தன் உணவை குழாய் போன்ற தன் வாயில் சுரக்கும் நீரால் கரைத்து திரவமாக்கி அதனைக் குடிக்கிறது. இதன் வாய் மிகப் பெரிதாக இல்லாததாலும் சிறிய குழாய் போல இருப்பதாலும் இப்புழுவில் உணவை அப்படியே வாயில் போட்டு மெல்ல முடிவதில்லை. ஆரம்பூலா என்ற ஒருவகைப் புழு ஒரு சிறிய குருவியைப் பிடித்து ஒரு நாள் முழுவதும் வைத்துத் தன் வாயில் சுரக்கும் நீரால் ஒருநாளில் கரைத்து திரவமாக்கிக் குடித்து விடுமாம்.

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1992 பிப்ரவரி மாத இதழில் வெளியிடப்படும்



M Natarajan



M. Natarajan

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ டிசம்பர் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்பு களுக்கு ரூ. 50/–பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

### அக்டோபர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : அன்பு அணைக்க வைக்கிறது

இரண்டாவது போட்டோ : ஆர்வம் படிக்க வைக்கிறது

பரிசு பெற்றவர் : என். கண்ணப்பன், சேலம்-5

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

# பெற்றோரின் அக்கறை




தீபா, அந்த சின்ன கொரில்-லாவைப் பாரு.


உடனே ஒரு பெரிய கொரில்லா எழுந்து நிற்கிறது
ர்ர்ர்ர்...


நாம் அதன் குட்டிக்கு தீங்கு செய்வோ-மோ என்று எண்ணி நம்மை பயமுறுத்துது.


சின்ன குட்டிக்கு யாரு தீங்கு செய்வா, அப்பா?
யாரும் செய்ய-மாட்டா, தீபா.


ஆனா, பெத்தோருக்கு அக்கறை இருக்குமே!


அந்த பெரிய கொரில்லாவைவிட நான் பரவாயில்லே. என்னிடம் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிசி இருக்கு.